# கவியரங்கக் கவிதைகள்

ரகுநாதன்
(''திருச்சிற்றம்பலக் கவிராயர்'')
இயற்றியவை



நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
சென்னை-600 098.

# முதற் பதிப்பின்

## முன்னுரை

கவியரங்கம் என்பது இலக்கிய விழாக்களில் ஒரு விசேட நிகழ்ச்சியாக இடம் பெறுவது இன்று பெரு வழக்காகி வருகின்றது. தற்காலக் கவிஞர்கள் பலரையும் ஒன்று கூட்டி, அவர்களைக் குறித்த தலைப்புக்களின் கீழ் கவிதைகள் பாடச் செய்து, அவற்றை ரசிகர்கள் முன்னிலையில் அரங்கேற்றம் செய்யும் இந்தச் சம்பிரதாயத்தை, முதன் முதலில் வானொலி நிலையத்தார்தான் சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்னர் தொடங்கி வைத்தார்கள் என்று நினைக்கிறேன். அதனைத் தொடர்ந்து முக்கியமான விழா நாட்களில் வானொலியிலும், மற்றும் பிறர் நடத்தும் இலக்கிய விழாக்களிலும் விசேட நிகழ்ச்சியாகக் கவியரங்கம் கூட்டுவது இன்றைய நடைமுறையாகிவிட்டது; ரசிகர்கள் மத்தியிலும் அதற்குப் பெருத்த வரவேற்பும் இருந்து வருகின்றது.

இந்த இருபதாண்டுக் காலத்தில் இவ்வாறு கூட்டப்பெற்ற கவியரங்கங்கள் பலப்பல. இவற்றில் சுமார் முப்பது கவியரங்கங்களில், குறிப்பாக, வானொலி, கம்பன் திருநாள், பாரதி விழாக் கவியரங்கங்களில் பங்கு பெறும் வாய்ப்பு எனக்குக் கிட்டியுள்ளது; இத்தகைய அரங்கங்களில் எனது கவிதைகளுக்கு ஒரு தனி வரவேற்பும் ரசிகர்கள் மத்தியிலே இருந்து வந்துள்ளது.

இவ்வாறு நான் கலந்து கொண்ட கவியரங்கக் கவிதைகளிற் சில எனது 'ரகுநாதன் கவிதைகள்' என்ற கவிதைத் தொகுதியில் ஏனைய கவிதைகளோடு

ஏற்கெனவே இடம் பெற்றுள்ளன. அந்தத் தொகுதி வெளிவந்த பின்னர் நான் கலந்துகொண்ட பதினைந்து கவியரங்கங்களின் கவிதைகளும் இந்தப் புதிய தொகுதியில் இடம் பெற்றுள்ளன. இந்தக் கவிதைகள் எவ்வெப்போது எங்கெங்கு அரங்கேற்றப்பட்டன என்ற விவரத்தை இந்நூலின் அனுபந்தமாகவுள்ள 'குறிப்புக்கள்' என்ற பகுதியில் காணலாம். எனது கவிதைகள் அரங்கேற்றமாகும் காலங்களில் நாட்டாரின் கவனத்துக்குரியவையாக விளங்கிய பல்வேறு பிரச்னைகள், நிகழ்ச்சிகள் முதலியவை பற்றிய குறிப்பும் அந்தந்தச் சமயங்களில் அந்தக் கவிதைகளில் இடம் பெறுவது வழக்கம். குறிப்புக்களில் நான் அவற்றைச் சுட்டிக் காட்டவில்லை. எனினும் அவை இயற்றப்பட்ட காலச் சூழ்நிலையைக் கருத்தில் கொண்டு, வாசகர்கள் அவற்றை இனம் கண்டு கொள்ளலாம்.

இந்தச் சந்தர்ப்பத்தில் என்னைக் கவியரங்கங்களுக்கு அழைத்துக் கௌரவித்த திருச்சி வானொலி நிலையத்தார் காரைக்குடி கம்பன் கழகச் செயலாளர் திரு. சா. கணேசன் ஆகியோருக்கும் மற்றும் இலக்கிய மன்றங்களுக்கும் எனது இதயம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். மேலும் இந்தக் கவிதைகளிற் பலவற்றைத் தமது பத்திரிகைகளில் வெளியிட்ட ஆசிரிய நண்பர்களுக்கும், குறிப்பாக 'சரஸ்வதி', 'தாமரை' ஆகியவற்றின் ஆசிரியர்களுக்கும் என் நன்றி உரியது.

கடைசியாக ஒரு விஷயம்: ''திருச்சிற்றம்பலக் கவிராயர்'' என்ற புனைபெயரில்தான் நான் கவிதைகள் எழுதி வந்தேன்; வருகிறேன். எனினும் இந்த அம்பலக் கவிராயரின் புனைபெயர் ரகசியம் விரைவிலேயே அம்பலமாகிவிட்டது. கவியரங்கங்களில் கலந்து கொள்ளத் தொடங்கிய காலமுதல், அங்கு நடைபெறும் அறிமுகம் முதலியவற்றால்,அந்தக் கவிராயர் நான்தான் என்பது நாடறிந்த, 'ரகசியமாக'ப் போய்விட்டது. எனவேதான் எனது முதல் கவிதைத் தொகுதியை 'ரகுநாதன் கவிதைகள்' என்ற பெயரிலேயே வெளியிட்டேன்; அதனைத் தொடர்ந்து இந்த நூலும் எனது இயற் பெயரிலேயே வெளிவருகின்றது. எனது ஏனைய நூல்களுக்குக் கிட்டிய வரவேற்பை எனது இலக்கிய வாசகர்களும் 'கவிராயரின்' ரசிகர்களும் இந்த நூலுக்கும் அளிப்பார்கள் என்ற நம்பிக்கை எனக்குண்டு.

16-10-1963
சென்னை

ரகுநாதன்

# உள்ளுறை

பக்க எண்

வானொலி :

# 1

# தமிழ் காட்டும் நல்லுலகு

1

தொல்லுலகில் பன்னெடுநாள்
தொட்டிலங்கும் தமிழ் காட்டும்
நல்லுலகம் பற்றியதோர்
நயமான கற்பனையைச்
சொல்லில் விரித்துரைக்கச்
சொல்லிநின்ற வானொலியே!
வானொலியின் கவியரங்கில்
வந்துற்ற அவைத்தலைவ!
அவைத்தலைவர் முன்னிலையில்
அறிவார்ந்த தமிழ்மரபின்
சுவைபலவும் நயம்படவே
சொல்லிநின்ற பாவலரே!
பாவலர்கள் எடுத்துரைக்கும்
பாட்டின் பொருளையெலாம்
ஆவலுடன் கேட்டுவக்கும்
அன்பார்ந்த நேயர்களே!

உமக்கெல்லாம்—
சிற்றம் பலத்தான்நான்
சிரம்வணங்கி, என்மனத்தில்
உற்ற சிலகருத்தை
உரைக்கத் தொடங்குகிறேன்.

## 2

அரிதரிதே என்றேநம்
அவ்வைப் பிராட்டியவள்
பெரிதும்பா ராட்டுகின்ற
பெறற்கரிய பெரும்பிறப்பாம்
மானிடராம் உயர்ஜாதி
மாநிலத்தி லேபிறந்து,
கானகத்தில், மலைப்புறத்தில்
கடற்கரையில், பாலைநில
வேனல்வெளி வெம்பரப்பில்,
வெங்கொடுமைச் சாக்காடு
கூனிப் பதுங்கியுயிர்
குடிக்கின்ற உறைபனியில்,
உயிர்வாழும் பெரும்போரில்
உயிரைப் பணயம்வைத்து,
உயிர்வாழ்ந்து வளர்ந்தோங்கி
உலகையெலாம் தனதாக்கி,
அறிவென்னும் பெறற்கரிய
ஆயுதத்தின் துணைவலியால்
செறிவை, பெருஞ்செழிப்பை,
சிந்தனையைப் பயிராக்கி,
அயர்ச்சி, களைப்புணர்ச்சி,
அலுப்புச் சலிப்பறியா
முயற்சித் திருவினையால்
முன்னேறி முன்னேறி
வாழ்ந்து வளர்ந்துவந்த
வரலாற்றுக் காதையினை
ஆழ்ந்துணர்ந்து சற்றேநாம்
ஆராய்ந்தால்,

அவ்வழியில்

மானிடர்தம் இதயத்தை
மலிவுப் பொருளாக்கும்
தானென்னும் அகங்காரத்
தருக்கும், செருக்குகளும்,
வாழ்வைத் தடைப்படுத்தும்
வழியடைச்சான் சந்துகளாய்ப்
பாழ்படுத்தும் புன்மைகளும்
பரவுகின்ற வேளையிலும்,
வாழ்வைக் கலையாக்கி
வளர்கலையை வாழ்வாக்கித்
தாழ்வுற்ற மாந்தரெலாம்
தலைநிமிர்ந்து முன்னேற,
சந்தைச் சரக்கான
சத்தியத்தை, மானிடர்தம்
சிந்தை உணர்ச்சிகளைச்
சிங்கா தனமேற்ற,
நரவுலக மக்களெல்லாம்
நடமாடும் தெய்வமெனச்
சுரவாழ்வு பெற்றுயர்ந்து
சோபிக்க வேண்டுமென்று
பொய்தீர்ந்த நல்லறிவும்
புரைதீர்ந்த சத்தியமும்
மெய்யுணர்வும் பெற்றொளிரும்
மேதைக் கவிஞர்பலர்
வையகத்து மானிடர்தம்
வாழ்வை வளம்படுத்தும்
தத்துவத்தை, லட்சியத்தை,
தருமத்தின் வாழ்வியலை,

சத்தியத்தை வகுத்துரைத்துச்
சாகாத நற்கவிதை
எத்தனையோ எத்தனையோ
எழுதி நமக்களித்தார்.

3

அத்தகைய—
வித்தகர்தம் திருச்சபையில்
விண்நிவர்ந்த மாமேரு
ஒத்துயர்ந்து தோற்றுகின்ற
உயர்கவிஞன், தமிழன்னை
உவப்புடனே பெற்றெடுத்து,
உலகினுக்கே ஈந்தளித்த
தவப்புதல்வன் கம்பனவன்
தானளித்த ராமகதைக்
காவியத்தில் சித்திரித்துக்
காட்டுகின்ற கற்பனையாம்
ஓவியத்தின் நல்லுலகை
ஒருசிறிதே கண்டிடுவோம்.

4

உண்ணும் உணவினுக்காய்
உலகத்தின் பூப்பரப்பைச்
செந்நெற் கழனிகளாய்
செங்கரும்புத் தோட்டமதாய்,
தின்னத் தினவூட்டும்
திங்கனிகள் ஊசலிடும்
பண்ணைகளாய் விளைவித்தும்,—

காடாய், மலைமேடாய்க்
காட்சிதந்த பூவுலகை
நாடாய், நகர்ப்புறமாய்,
நாகரிகத் தின்கொலுவாய்,
கண்ணைக் கவர்ந்திழுக்கும்
கலைக்கூட மாளிகையாய்ப்
பண்ணி நிறைத்தழகுப்
படைப்புப் பலபடைத்தும்,—

பூமிக் கதவுடைத்துப்
புகுந்துள்ளே ஒளிசிதறும்
காமர் மணியினத்தை,
கனகத்தை, வயிரத்தை,
வாரிக் கொணர்ந்திந்த
வையம் தனிற்குவித்தும்,
இன்ன பிற—

வீரியஞ்சேர் விந்தைபல
விளைத்திட்ட மானுடத்தின்
காரியங்கள் அத்தனையும்
களிப்பூட்டும் செய்திகள்தாம் !

என்றாலும்—
ஆகாரப் பொருள்பலவும்
ஆக்கிப் படைத்தமகன்
ஏகா தசிப்பசியில்
ஏங்கித் தவிப்பதுவும்,
விண்ணிடிக்கும் மாளிகையை
விளைத்திட்ட பஞ்சைமகன்
மண்ணிடிந்த குடிசையினுள்
வறுமையிலே வாடுவதும்,

காசினியின் செல்வமெலாம்
கைத்திறமை யாற்படைத்தோன்
காசினுக்கு விதியிழந்து
கலங்கியுயிர் வாழுவதும்,

வேறு சிலர்—
உண்டே உறங்குவதும்,
உழைப்பின்றிச் சுகபோகம்
கண்டு, குதூகலித்துக்
களியாட்டம் ஆடுவதும்,
ஊராரின் பேருழைப்பை,
உதிரத்தை, உரிமைகளைப்
பேராசை வெறிபிடித்துப்
பிய்த்துப் பிடுங்குவதும்
சீரான வாழ்க்கையெனச்
செப்பி விடத்தகுமோ?

எனவேதான்—
கொள்வாரும் கொடுப்பாரும்
குடிவாழா நல்லுலகை,
கள்வாரும் காவலரும்
காட்சிதராப் பேருலகை,
இல்லாரும் உடையாரும்
இல்லாத சீருலகை,
எல்லாரும் எல்லாமும்
எய்துகின்ற எழிலுலகை,
வள்ளன்மைப் பெருமைகளும்
வறுமையின்புன் சிறுமைகளும்
எள்ளளவும் இல்லாத
இனியதொரு நல்லுலகைத்

தெள்ளு தமிழ்மொழியில்
தெரிந்துரைத்தான் எம்கம்பன்.

5

கரைபுரண்டு திரண்டுவரும்
காட்டாற்றை வழிப்படுத்திக்
கரையமைத்துக் கால்திருத்திக்
கட்டுப் படுத்தியதும்,
ஆர்ப்பரித்துப் புடைபுடைத்து
அலையெறியும் சாகரத்தின்
நீர்ப்பரப்பின் மீதேறி
நேமிவலம் செய்வதுவும்,
பரந்தவெளி வான்விசும்பில்
பறவைக் கணம்போலே
திரிந்துலவி அட்டதிசைத்
தேசமெலாம் செல்லுவதும்,
மரணத்தைக் கண்டுமனம்
மலைக்காது, தம்முயிரைத்
திரணமென மதித்துலகின்
திட்பம் நுட்பமெலாம்
கண்டறிந்து பற்பலவாம்
கருவிகளைச் சமைத்ததுவும்,

இன்ன பிற—

சாதனைகள் பற்பலவும்
சாதித்த மானுடத்தின்,
கோதகன்ற பேராற்றல்
குடிகொண்ட வீரத்தின்

தன்மைகளை நமக்குணர்த்தித்
தலைநிமிரச் செய்துவரும்
உண்மைகள்தாம் !

என்றாலும்—
வாள்வலியால், தோள்வலியால்,
வாய்த்ததொரு படைவலியால்,
ஆள்பலத்தால், ஆதிக்க
ஆணவத்தால், இவ்வுலகில்
வலியவர்கள் மெலியவரை
வாட்டி வதைப்பதுவும்,
எளியவரை வளம்மிக்கோர்
எற்றி மிதிப்பதுவும்,
மாந்தர் தமக்குள்ளே
வன்பகைமைத் தீமூட்டிச்
சாந்தி தனைக்குலைக்கச்
சதித்திட்டம் தீட்டுவதும்,
ஈரமிலா நெஞ்சத்தின்
இழிதகவுக் கிரையாகிப்
போரடுத்துச் சாடுவதும்,
பூவுலக மக்கள்தமைப்
பீரங்கிக் கிரையாக்கிப்
பிணக்கோல மாக்குவதும்,
பெண்டுகளும் பிள்ளைகளும்
பிரலாபக் குரலெழுப்பக்
குண்டு மழைபொழிந்து
கொலைக்கூத்து ஆடுவதும்,
ஆனபல வெங்கொடுமை
அழிவுச் செயல்புரிந்து
கூனச் சிறுமதியால்

கோரம் பலவிளைத்து,
நாட்டை, நகரத்தை,
நரகக் குழியாக்கும்
வேட்டை வெறிச்செயலை
வீரமெனக் கூறுவதோ?

எனவேதான்—
வீரமெனும் பேராலே
வெஞ்சமரைத் தோற்றுவிக்கும்
போர்வெறியர் தம்கூட்டம்
போயொழிந்த நல்லுலகை,
கொல்லும் படைக்கருவிக்
குவையெல்லாம் உருமாறி
நல்லபல எந்திரமாய்
நாதம்செய் நல்லுலகை,
மெலியவரை வலியவர்கள்
மேலாட்சி செய்யாது
வலியவரும் மெலியவரும்
வாழாத நல்லுலகை,
பகையொழிந்து மாந்தரெலாம்
பண்புடனே நட்பாடி
நகைமுகத் தோடிலங்கும்
நல்லதொரு புத்துலகை
வகையறிந்து நற்கவியால்
வகுத்துரைத்தான் நம்கம்பன்!

6

பகுத்தறியும் பேரொளியால்
பார்மேவும் பருப்பொருளின்
தொகுப்பையெலாம் விஞ்ஞானச்

சோதனையால் ஆராய்ந்தும்,
அண்டாண்ட பிண்டமெனும்
அண்டபகி ரண்டமெலாம்
செண்டாடும் பந்துகள்போல்
சித்துவித்தை யால்கறங்கிச்
சுற்றிச் சுழன்றுடும்
சூட்சுமத்தின் உட்பொருளை
உற்றுத் தெரிந்துபல
உண்மை களைத்தெளிந்தும்,
மனிதர்களின் புவிவாழ்வின்
மருமத்தை, அவ்வாழ்வை
இனிதமைக்க வழிகாணும்
இம்மை நடைமுறையை,
வறுமை பிணிதுன்பம்
வாட்டுகின்ற வாழ்வியலின்
சிறுமைகளின் காரணத்தைச்
சிந்தித்துக் கண்டறிந்தும்,
அறியாமைப் பேரிருளில்
அந்தகராய்க் கிடந்துதிசை
தெரியாமல் தடுமாடித்
திண்டாடும் பாமரர்க்குக்
கல்வியெனும் தூயவொளிக்
கைவிளக்கால் உலகியலை
நல்விதத்தில் புரிந்துணர
நற்கலைகள் பலபடைத்தும்,
காவியத்தால், கற்பனையால்,
கதைவளத்தால், கண்கவரும்
ஓவியத்தால், நாடகத்தால்,
உளமுருக்கும் இன்னிசையால்
பூவுலக வாழ்வியலின்
பொருளையெலாம் விரித்துரைத்தும்

இன்னபிற—
சேவையினுல் மானிடர்கள்
சேகரித்த நல்லறிவுக்
கோவையெலாம் நம்முளத்தைக்
கொள்ளைகொளும் செய்திகள்தாம்!

என்றுலும்—
கதியிழந்து வாழ்க்கையிலே
கஷ்டப் படுவதெலாம்
விதியென்றும், முற்பிறப்பின்
வினைப்பயனின் விளைவென்றும்
அதிமோச வார்த்தைசொலி
அநியாயம் செய்வதுவும்,
சாதி சமயமெனும்
சழக்கால் மனிதர்களைப்
பேதித்துச் சேதித்துப்
பின்னப் படுத்துவதும்,
பொன்னுசை மண்ணுசை
பொருளாசை வெறியாலே
மன்னனுக்கோர் நீதியென்றும்
மக்களுக்கோர் நீதியென்றும்
சூத்திரங்கள் தனைவகுத்துச்
சுரண்டுகின்ற செயலையெலாம்
சாத்திரங்கள் சம்மதிக்கும்
சத்தியங்கள் என்பதுவும்,
எச்சிற் பிழைப்புக்காய்
இதயத்தை விலைசாட்டிக்
கொச்சைக் கருத்துகளை,
குடிமக்கள் தம்முளத்தில்

நச்சைஉரு வேற்றுகின்ற
நாசப் பொய்மைகளை
அச்சம் சிறிதின்றி
அரங்கேற்றம் செய்வதுவும்,
ஆன இவைபோன்றே—

உண்மையெனும் பேராலே
உலகில் திரிந்துலவும்
தன்மைகளை அறிவென்றே
தருக்கிச் சொலப்படுமோ?

எனவேதான்—

பொய்யும் புனைசுருட்டும்
பூண்டற்றுப் போயொழிந்து
மெய்யின் தனியாட்சி
மேவுகின்ற நல்லுலகை,
எண்ணும் எழுத்தறிவும்
எய்தாத இருளூடே
கண்ணற்றுக் கருத்தற்றுக்
கலங்குகின்ற மக்களெல்லாம்
அறியாமை தனைப்போக்கி,
அறிவாற்றல் கண்டறிந்த
செறிவையெலாம் சீரணித்துச்
சிறப்பெய்தும் நல்லுலகை,
சுயநலத்தால், பேராசைச்
சூதாட்டச் சூழ்ச்சிகளால்,
கயமையினால், பகைமையினால்
கட்டிவைத்த பொய்மையெலாம்
வேரோடு பட்டழிந்து
வீழ்ந்துபட, நல்லறிவு

சீரோடு மேலோங்கிச்
செழிக்கின்ற நல்லுலகை
ஆரமுதக் கற்பனையால்
அளித்திட்டான் நம்கம்பன்!

7

எல்லோரும் செல்வர்களாய்
எல்லோரும் வீரர்களாய்
எல்லோரும் அறிஞர்களாய்
இருக்கின்ற நல்லுலகை,
கம்பத் திருநாடன்
காட்டியதோர் நல்லுலகை,
நம்பரத கண்டமிதில்
நனவாக்கும் திருப்பணியைப்
பொங்கற் புதுநாளில்
புனித உணர்வோடு
சங்கற்ப மாய்ஏற்றுச்
சாதிப்போம் என்றுசொலி
உங்களிடம் விடைபெற்றேன்;
உரையை முடிக்கின்றேன்.

1957

# 2

## புதியதோர் உலகு: விஞ்ஞானி

1

புத்துலகம் பற்றியதோர்
புதுமைக் கனவுலகைச்
சித்திரிக்க வேண்டுமெனச்
செப்பிநிற்கும் வானொலியே!
வானொலியின் கவியரங்கில்
வந்துற்ற அவைத்தலைவ!
அவைத்தலைவர் முன்னிலையில்
அரங்கேறிக் கவிதைசொலும்
கவிவாணர் திருக்குழுவே!
கவிவாணர் கண்டகவிக்
கனவு பலப்பலவும்
செவியேற்றுக் களிப்பெய்தும்
செந்தமிழ்நன் னாட்டோரே!

உமையெல்லாம்—
சிற்றம் பலத்தான்நான்
சேவித்து, புத்துலகம்
பற்றியொரு விஞ்ஞானி
பார்க்கின்ற கனவுலகைச்
சற்றேஎன் வார்த்தைகளில்
சாற்றத் தொடங்குகிறேன்.

## 2

எதிர்காலம் நம்காலம்,
இன்புதரும் நற்காலம்,
புதுவாழ்வு தனைநல்கும்
பொற்காலம் என்றெல்லாம்
வருங்காலப் புத்துலகை
வாழ்விக்க, வளமாக்க,
அருங்கனவு பலகாணும்
அன்பரெவர் ஆனாலும்,

அவர் காணும்—
நெடுவேனிற் பகற்கனவை
நினைவை நனவாக்கிக்
கொடுவந்து காட்டுகின்ற
குறிக்கோளே விஞ்ஞானம்
என்னுமொரு உண்மைதனை
இவ்வுலகம் நன்கறியும்!

என்னவெனில்—
பல்லாண்டு பல்லாண்டு
பல்லாயிரத்தாண்டுத்
தொல்லை நெடுங்காலம்
தொட்டே,இம் மானிடத்தின்
எல்லையற்ற வாழ்க்கையெனும்
இயக்கத்தின் பாதையிலே,
மருட்டும் திகைப்பூட்டும்
மதிலாய் வழிமறிக்கும்
இருட்டாம் அறியாமை
இரும்புத் திரைகிழித்து,

நீரென்றும், நெருப்பென்றும்
நிலம்விசும்பு காற்றென்றும்
கூறுகின்ற பாருலகின்
கூறுகளை ஆராய்ந்து,
பூதப் பருப்பொருளின்
புதைபொருளை, அப்பொருளின்
ஏதை, இயற்கையவள்
இயங்கிச் செயல்புரியும்
சூதை, பிரகிருதிச்
சூட்சுமத்தைக் கண்டறியும்
வேதனையில், விளையாட்டில்,
வெஞ்சமரில், விநாசத்தில்,
போதவிழ்ந்த மெஞ்ஞான
போதமெனும் விஞ்ஞானம்
சாதித்த விந்தையெலாம்
சாற்றற் கெளிதாமோ?

3

கானப் பறவையைப்போல்
கந்தருவச் சுந்தரர்போல்
வானத்து வீதியிலே
வட்டமிட்டுப் பறந்துலவ
ஆனவிண்ணின் எந்திரத்தை
ஆக்கிப் படைத்ததுவும்—
நீராழம் தெரியாத
நெடுங்கடலின் மடிமீது
தாராள மாய்ச்சென்று
தவழ்ந்து விளையாடும்
ஏராள மாம்கப்பல்

இயற்றிக் கொடுத்ததுவும்—
கட்டுக் கரையுடைக்கும்
காட்டாற்றின் வலிமைதனை
மட்டுப் படுத்தியதை
வாய்க்கால் வழிபாய்ச்சி
வெட்டவெளிப் பொட்டலினை
விளைநிலமாய்ச் செய்ததுவும்—
சுட்டுப் பொசுக்குகின்ற
சுடுநெருப்பை, கைக்குள்ளே
கட்டிவந்து நம்வீட்டுக்
கைவிளக்கை ஏற்றுவதும்—
வெட்டி நிலம்பிளந்து
வெளிக்கொணர்ந்த நிலக்கரியும்
கட்டிக் கனியிரும்பும்
கைகோத்தே எந்திரமாய்க்
கொட்டி முழக்குகின்ற
குலவைக் குரலொலியில்
மட்டுப் படாச்செல்வம்
மலையாய்க் குவிப்பதுவும்—
அண்டபிண்ட மத்தனைக்கும்
ஆதிமுதற் கூறெனவே
கண்டுரைத்த அணுத்துகளைக்
கண்டதுண்ட மாக்கியதன்
விண்டுரைக்க ஏலாத
விசுவ தரிசனத்தைக்
கண்டுணரச் செய்தவொரு
காரியத்தின் சாதனையும்—
கங்குகரை காணாத்
ககனத்துப் பேரரங்கில்

செங்கதிரும் சந்திரனும்
செம்மீனும் வடமீனும்
நங்கையர்கள் சுற்றிவந்து
நடனமிடும் தன்மையிலே
தங்குதடை யின்றிகளித்
தாடிவரும் வேளையிலே,
அங்கவர்கள் தமக்குள்ளே
அம்மானை ஆடுதற்காய்
இங்கிருந்து நாமெறிந்த
இயல்பைப்போல், வான்வெளியில்
திங்கட் குழவிபல
திருலோகம் சுற்றுவதும்

இன்ன பிற—
அற்புதங்கள் பற்பலவும்
ஆக்கிப் படைத்துலகைப்
பொற்புடைய தாக்கியிவண்
புகழ்படைத்தான் விஞ்ஞானி !

4

என்றாலும்—
நண்டுசிப்பி வேய்கதலி
நாசமுறும் காலமதில்
கொண்டதொரு கருவதுவே
குலமழிக்கும் தன்மையிலே,
அஞ்ஞானம் தனைப்போக்கி
அறிவு தனைவளர்க்கும்
விஞ்ஞானம் கற்றறிந்த
வித்தகர்கள் ஒருசிலபேர்

இந்நாளில்—
பாடுபட்டுக் கண்டறிந்த
பலப்பலவாம் உண்மைகளை
நாடுகொளும் பேராசை
நச்சுகின்ற வெறியருக்கே
ஈடுவைத்தார் என்றிடுமோர்
இழிதகவும் நாமறிவோம்.

ஆதலின் நாம்—
காட்டுகின்ற விஞ்ஞானி
காணுகின்ற புத்துலகில்
நாட்டாசை வெறிபிடித்த
நயவஞ்சக் காரருக்குக்
கூட்டாளி யாய்நின்று
கொலைக்கருவி தனைச்சமைத்துத்
தீட்டிக் கொடுப்பவராம்
தீயருக்கும், ஆதிக்கப்
போட்டியிட்டுப் பூவுலகைப்
போர்க்களமாய் ஆக்கவெணும்
வேட்டை வெறியருக்கும்,
விஞ்ஞான லட்சியத்தைக்
காட்டிக் கொடுப்பவர்க்கும்
கால்தரிக்கக் காணியில்லை !

## 5

அவ்வுலகில்;
மனிதரொடு போர்தொடுக்கும்
மறலியென விஞ்ஞானி
பணிபுரியான்; மாறுகப்
பாருலகை மேன்மேலும்

இனிதமைக்கும் நற்பணிக்காய்
இயற்கையொடு போராடும்
நனிசிறக்கும் பெருவீர
நாயகனாய் நின்றிலங்கிக்
கனிதருமோர் நன்மரம்போல்
காசினிக்குப் பயன்தருவான்!

அவ்வுலகில்:
மானந் தனைமறைக்க
மழைவெயிலைத் தான்தடுக்கச்
சாணகலத் துணியின்றிச்
சாம்புகின்ற மக்களில்லை!

ஏனெனிலோ—
கௌரவர்தம் சபைநடுவே
கற்புக் கனலியெனும்
திரௌபதியின் மேல்துகிலைத்
தீயோன் தொட்டுரிந்த
காலத்தே, அருள்புரிந்த
கண்ணனுமே கைசலிப்பான்
போலுமென அலையலையாய்ப்
பொங்கிப் புரண்டுவரும்
சேலை துணிமணியைச்
செய்து குவித்தொலிக்கும்
ஆலைப் புகைமணக்கும்!

அவ்வுலகில்:
பஞ்சமில்லை; பயிர்தீய்ந்து
பாலைவன மாகிடுமோர்
புஞ்சையில்லை; மழைபொய்த்துப்
போவதில்லை; நாட்டுமக்கள்

தஞ்சமென்று குடிகிளம்பித்
தட்டழிந்து சாவதில்லை!

ஏனெனிலோ—
பெய்யென்றால் பெய்யென்றே
பெருமழையைப் பெய்விக்கும்
தெய்வீகக் கற்புநெறித்
திறலார்போல், அவ்வுலகில்
வேண்டுகின்ற வேளையெலாம்
விண்ணகத்தே கார்முகிலைத்
தூண்டிமழை பெய்விக்கும்
சூட்சுமத்தின் நற்பயனாய்,
கொள்ளிப்பேய் பலகூடிக்
கூத்தாடும் அவைக்களம்போல்
கள்ளிப் பொறிபறக்கும்,
கானல் தகதகக்கும்
பாலைவெளி வெம்பரப்பும்
பச்சைநிற நெல்வயலாய்,
சோலையெனக் காட்சிதந்து
சோபிக்கும்!

அவ்வுலகில்:
நோயில்லை; நொடியில்லை;
நோக்காட்டால் சிறுவயதில்
மாய்ந்திடுவார் கூட்டமில்லை!
வாழ்க்கையிலே பூரணமாய்த்
தோய்ந்திட்டார் தாமன்றித்
துஞ்சுபவர் யாருமிலை!

ஏனெனிலோ—
பாய்ந்துவந்த அத்திரத்தால்
பட்டுவிழுந் தாவிவிட்டுச்

சாய்ந்திட்ட வீரர்தமை,
சஞ்சீவி மலைகொணர்ந்து
மாய்ந்திட்ட நல்லுயிரை
மறுபடியும் மீட்டுவந்த
மாருதியின் சாகசம்போல்,
மாநிலத்தில் நோய்நொடியின்
வேரறிந்து, அன்னவற்றை
வீழ்த்துகின்ற முறைதெரிந்து
மானிடரை இன்னமுதம்
மாந்திநிற்கும் தேவரென
நீணிலத்தில் வாழவைக்கும்
நேர்த்தியந்தப் புத்துலகில்
தானிருக்கும்!

6

இவ்வாறாய்—
அறிவுவந்த நாள்முதலாய்
அவனியிலே தம்வாழ்வை
நிறைவுடைய தாக்குமொரு
நெறியால், லட்சியத்தால்,
அறிஞர்களும், கவிஞர்களும்,
ஆராய்ச்சி வல்லுநரும்,
காவியத்தில், ஓவியத்தில்,
கதையில், நற் கற்பனையில்
பாவித் தெழுதிவைத்த
பகற்கனவின் புதைபொருளைப்
பூவுலக வாழ்வியலில்
பொருளுள்ள பொருளாக்கித்

தேவுலகாய் இவ்வுலகைத்
திருத்தமுறச் செய்யுமொரு
சேவையில்தான், விஞ்ஞானி
சிறந்ததொரு வாழ்வளிக்கும்
புத்துலகைக் கண்டுள்ளம்
பூரிப்பான் என்றுசொலி
இத்துடனே என் கவியை
இனிதே முடிக்கின்றேன்.

1958

# 3

# இருவேறு உலகம்: பகுத்தறிவு வாதம்

1

இருவேறு உலகத்தின்
இயற்கை தனைப்பாடி
வருமாறு எமைப்பணித்த
வானொலியே! வானொலியார்
தருமிந்தக் கவியரங்கின்
தலைவ! அரங்கத்தே
ஒருமித்து வந்துகவி
உரைக்கும் தமிழ்ப்புலவீர்!
அருமைத் தமிழ்நாட்டின்
அன்பான நேயர்களே!

உமக்கெல்லாம்—
சிற்றம் பலத்தான்நான்
செய்தேன் பலவணக்கம்.
மற்றினிஎன் கவிதையினை
வாசிப்பேன்; செவிசாய்ப்பீர்.

2

மேலைத் திசைநாட்டின்
மேன்மைக்கோர் காரணமாய்

சாலப் பலநூலோர்
சாற்றுகின்ற மானுடத்தின்
பகுத்தறிவாம் வரலாற்றுப்
பான்மையினை ஓர்சிறிதே
வகுத்துரைப்பாய் என்றிட்டார்
வாசெனலியார்.

நேயர்களே!
வாருங்கள்! காலமெனும்
வழியூடே கருத்தென்னும்
தேரேறி நாம்சிறிதே
திரிந்துலவி வந்திடுவோம்.
நேரம் அதிகமில்லை;
நெடுந்தூரப் பயணமிது!

3

இற்றைத் தினத்துக்கே
எழுநூறு ஆண்டுகட்குச்
சற்றேறக் குறைவான
சகாப்தத்தில்...

மெஞ்ஞானம் வளராத
மேல்நாட்டில், மக்களெல்லாம்
அஞ்ஞான இருட்கிடங்கில்
அழுந்தித் தவிதவித்து,
விஞ்ஞானப் பேரறிவின்
வெளிச்சம் பரவாமல்
பொய்ஞ்ஞான மதக்குரவர்
போதனையே வேதமென்று
கும்பி கொதித்தெரியும்
கொடிய மிடிமையிலும்

நம்பி உயிர்சுமந்து
நலிவுற்ற காலமது!

'வேதன் விதிப்படியே
விளைந்துவந்த மண்டலமாம்
பூதலத்தே நீகாணும்
புன்மைகளும், வாழ்வியலின்
வாதனையும், பசியெடுத்த
வயிற்றுக்குச் சோறில்லாச்
சோதனையும் நீஇழைத்த
சொல்லரிய பாவத்தின்
வேதனையே யாம்!' என்று
வினைவிதைத்த காலமது!

நரவுலகில் துன்புற்று
நலிகின்ற மக்களுக்குப்
பரவுலகில் இடந்தேடும்
பரந்த திருவுளத்தால்,
அன்னவர்கள் தாமிழைத்த
அநியாயம் அத்தனையும்
மன்னித் தருள்புரியும்
மன்னுப்புச் சீட்டுகளை,
பாபந்தனைப் போக்கும்
பரலோக முறிச்சீட்டை,
லாபம் பெருமெண்ணம்
லவலேசம் இன்றி, மிக
மலிவான விலைக்கருளி
மக்கள்தமைக் கரையேற்றும்
புலிக்கூட்டம் பசுத்தோலைப்
போர்த்திநின்ற காலமது!

பெய்மழைபோல் செங்குருதிப்
பெருக்கோட, சிலுவையின்மேல்
மெய்வருந்தும் வேளையிலும்
மேல்நோக்கி, 'என்தந்தாய்!
செய்வதறி யார்!இவர்கள்
செய்யும் பிழைபொறுத்து
உய்வழியைக் காட்டாய்!'என்
றுரைத்த பெருங்கருணை
அய்யன்அவன் பேராலே
ஆதிக்கப் படுகொலைகள்,
சிலுவைப் பெரும்போர்கள்,
சிரச்சேதம் முதலியவை
சூலவையிட்டுக் கொக்கரித்த
கோலத்தின் காலமது!

பூதப் பொருட்சேர்க்கைப்
பொலிவால் விளங்குகின்ற
மேதினியை, அஃதுணர்த்தும்
மேலான உட்பொருளை,
வேதைப் புடநெருப்பின்
வெந்தழலில் ஆராய்ந்து
சோதித்து, மெய்யுணர்ந்து
சொல்லத் துணிந்தவரை,

சூதனென்றும், பேய்பிடித்த
சூனியத்துக் காரனென்றும்,
ஆதிபர மாண்டவர்க்கே
ஆகாத சண்டனென்றும்
ஓதி, அவரையெல்லாம்
ஊர்நடுவே கழுமரத்தின்

மீதினிலே கட்டிவைத்து
விறகிட்டு, நெருப்பிட்டுப்
பூதிப் பொடியாக்கிப்
பொசுக்கிக் களித்தவரும்,
அன்னவர்க்குப்
பிறப்பளித்த மண்ணைவிட்டுப்
பிரஷ்டம், பாதாளச்
சிறைக்கூடம், சித்ரவதை,
சிந்தனைக்கு வாய்ப்பூட்டு
என்றே பலஇன்னல்
இழைத்தும் மகிழ்ந்தவர்கள்
மன்றேறிக் கோலோச்சி
மண்ணாண்ட காலமது!

4

என்றாலும்—
கத்தூரி வாசனையைக்
கட்டிச் சிறைகாத்து
வைத்திருக்க வழியுண்டோ?
வானமெலாம் கதிர்வீசும்
சூரியனார் பேரொளிதான்
சுளகால் மறைந்திடுமோ?
ஊளையிடும் குள்ளநரி
ஓலம் தனைக்கேட்டுக்
கோளரிதான் குலைநடுங்கிக்
குகைக்குள்ளே துஞ்சிடுமோ?
சொடுக்கித் துவண்டோடித்
துள்ளுகின்ற மின்னலதன்

மிடுக்கும் மேட்டிமையும்
மின்மினிக்குப் பம்மிடுமோ?

அஃதேபோல்—
எண்ணம் தனைச்சிறையில்
இட்டுவெற்றி கண்டவரை,
திண்ண முடையறிவைத்
திரையில் மறைத்தவரை,
கண்ணைப் பறித்துள்ளக்
கருத்திருளச் செய்தவரை,
மண்ணகத்தே மானிடர்தம்
வரலாறு கண்டதில்லை.

5

இத்தகைய—
வரலாற்றுப் பாதையிலே
வருடம் பலகடந்த
பிறகோர் சமயத்தைப்
பின்னோக்கிப் பார்த்தாலோ?

உலகத் தியற்கைதனை
உற்றறிந்து கற்றவரை,
கலகத்தீ மூட்டுகின்ற
கயவரென்று சொன்னவரின்
செத்து மடிந்தழிந்து
செல்லாகி விட்டபழந்
தத்துவங்கள் பற்பலவும்
தவிடுபொடி யாகிவிட,
சிந்தைக்கே விலங்கிட்டுச்
செயலாற்றத் தடைசெய்த

முந்தைப் பழம்மூட
முடிவெல்லாம் முடிவெய்த,
அரிகண்ட எமகண்ட
ஆபத்தின் மத்தியிலும்
நெறிகண்டு, குறிகண்டு,
நீங்காத வெறிகொண்டு
அஞ்ஞான இருள்போக்கி
அறிவுச் சுடர்கொளுத்தி
விஞ்ஞான வித்தகர்கள்
விண்டுரைத்த உண்மையெலாம்
விளம்பல் எளிதாமோ?

6

சூரியனும் பேரொளியைச்
சுற்றி வலம்திரியும்
பாருலகின் மருமத்தைப்
பகர்ந்து, பழம்பொய்க்கே
ஆப்பறைந்து, ஆராய்ச்சி
அறிவதனைத் தூண்டிவிட்ட
கோப்பர்னிக் கஸ்என்பான்
குறித்துவைத்த உண்மைகளும்—
கன்னிமகள் ஒருத்தி
கண்ணைப்போல் கவர்ந்தீர்க்கும்
இந்நிலத்தின் மின்காந்த
இயல்பின் சூட்சமத்தைக்
கண்டுணர்ந்து கற்றறிந்த
கலிலீயோ—நியூட்டனெனும்
பண்டைப் பெருமக்கள்
பகர்ந்திட்ட பொன்னுரையும்—

படபடக்கும் நம்மிதயப்
பண்பை, செங்குருதி
நடைபழகிச் செல்கின்ற
நாளத்தைக் கண்டறிந்து
உடலியலில் ஹார்வியன்று
உரைத்திட்ட உண்மைகளும்—
உயிர்வாழும் பெரும்போரில்
உயிர்காத்து, உருமாறி
உயர்வெய்தி, நிலைத்திட்ட
உலகத் துயிர்க்குலத்தின்
சந்ததியின் பரிணாமச்
சரித்திரத்தைக் கண்டுரைத்த
சிந்தனையான் டார்வினது
சித்தாந்த தத்துவமும்—
மானிடர்தம் பகுத்தறிவை
வளப்படுத்தி, மக்கள்தமை
மேனிலைக்குக் கொண்டுசென்ற
விந்தையெல்லாம் ஓர்சிலவோ?

7

நீராவிச் சக்தியினை
நெறிப்படுத்திச் செயல்மூட்டி,
பேராற்றல் தனைவிளைத்த
பெற்றியினால்—
காலம் மிகச்சுருங்க
காணும் தொலைநெருங்க
நாலுதிக்கு மூலையையும்
நாடி நரம்புகள்போல்

இணைத்துப் பிணைத்தோடும்
இருப்புப் பாதைகளும்,—
நெருப்பும் நிலக்கரியும்
நீறிக் கணகணக்க
இருப்புக் கனித்தாதை
இளக்கிக் குழம்பாக்கிக்
கருப்பங் கழிச்சாறு
கட்டிவெல்லம் ஆனாற்போல்
விருப்புற்ற எந்திரமாய்
வெளிப்பட்டுச் செயலாற்றும்
திருப்பணியை வரலாற்றில்
சிருஷ்டித்த காரியமும்,—
அக்கரையின் பச்சைதனை
அறியவொணா நெடுங்கடலில்
திக்கறியும் மின்காந்தத்
திசைகாட்டி யேதுணையாய்,
பொன்காய்க்கும் நாடுகட்குப்
போகும் தடம்தெரிந்து
கண்காணாச் சீமையெலாம்
கண்டுகரை ஏறியதும்—
ஆன இவையெல்லாம்
ஆராய்ந்து பகுத்தறிந்த
ஞானத்தால் சித்தித்த
நன்மைகள் தாம்.

8

ஆனாலும்—
அறிவின் பேராற்றல்
ஆக்கிப் படைத்தளித்த
செறிவை, செல்வத்தைச்
சிறுபான்மை யாய்விளங்கும்

ஒருசிலபேர் தம்முடைய
உடைமையென ஆக்கியதால்—
அட்டாள தேசமெலாம்
அடிமைகொள இச்சித்துப்
பட்டாளப் போர்க்கருவி
படைத்துக் குவித்ததனுல்—
பெட்டியிலே சேர்ந்த பணம்
பிதுங்க, ஏழைமக்கள்
முட்டிக்கால் தட்டி
முழிபிதுங்கக் கண்டதனுல்—
அரும்பாடு பட்டுழைக்கும்
அறிவுள்ள மானுடனே
இரும்போடு இரும்பாக்கி
எந்திரமாய் மாற்றியதால்—
சிந்தனையால் நல்லறிவால்
சித்தித்த வெற்றிகளைச்
சந்தைச் சரக்காக்கிச்
சச்சரவு செய்ததனுல்—
அவரெல்லாம்—
அன்பின் திறமிழந்தார்;
அறிவின் பயனிழந்தார்;
வன்பகையைப் பயிர்செய்தே
வாழத் துணிந்துவிட்டார்!

9

அப்போதும்—
இதயத்தைச் சூழ்ந்திட்ட
இருள்நீக்கி, அறிவொளியை

உதயமுறச் செய்வதற்காய்
உழைத்தோரும் அந்நாட்டில்
பலருண்டு; அவர்பட்ட
பாட்டுக்கும் பலனுண்டு.
அன்னவரில்—
பெரும்புரட்சித் தீவிளைத்த
பிரான்சென்னும் திருநாட்டில்
அரும்பி மலர்ந்துமணம்
அளித்திட்ட ரூசோவும்—
இரும்புச் சிறையூடே
ஈயத்தின் சிறுதுண்டால்
சிந்தனையைத் தேக்கிவைத்த
சீராளன் வால்டேரும்—
பந்தத் தளையறுக்கப்
பாட்டாளி ஒன்றுபட்டால்
சந்ததமும் நல்வாழ்வை
சாதிக்க ஒண்ணுமென்றே
சிந்தனையால், பொதுவுடைமை
சித்தாந்த தத்துவத்தைத்
தந்திட்ட மார்க்ஸென்னும்
தகவோனும், நம்மனத்தே
இந்தக் கணம்சற்றே
இலங்கிநின்று ஏகிடுவார்!

## 10

இவ்வாறாய்—
காலத்தே சஞ்சரித்துக்
காலாறி, மேற்றிசைவாழ்
ஞாலத்தின் வரலாற்றை

நாமறிந்து மீண்டுவந்தால்,
இருபத்தாம் நூற்றாண்டின்
இன்றை உலகமொரு
திருப்பத்தை நம்மறிவுத்
தெளிவுக்குப் புலனாக்கும்.

மேல்நாட்டில்—
அறிவின் துணைகொண்டே
ஆக்கிப் படைத்தபல
கருவிகளைக் கைக்கொண்ட
காரணத்தின் ஆணவமும்—
பொன்னாசை வெறிபிடித்துப்
பூப்பரப்பின் எல்லையெலாம்
தன்னாட்சிக் குட்படுத்த
தருக்கிநின்ற புன்மைகளும்—
கீழைத் திசையுலகைக்
கீழ்ப்படுத்தி, வாழையடி
வாழையென வாழ்ந்துவந்த
வஞ்சகர்தம் நெஞ்சுரமும்—
முடிவுகண்டு, அன்னவர்தம்
மூர்க்கம் அறத்தொலைந்து,
விடிவெள்ளி பூத்துலகம்
விழித்தெழுமோர் பொற்காலம்
கடிதுவரக் காத்திருக்கும்
கதிரொளியும் கண்டிடுவோம்.

## 11

இன்றைக்கு—
ஆதிக்க வேட்டைவெறி
ஆணவத்தின் உச்சநிலை

மோதலிலே, போர்முகத்தில்
முளைத்தெழுந்து அச்சுறுத்தும்
அரக்கக் குழந்தையென
அணுகுண்டு பிறந்துலகில்
இரக்கம் எனும்பொருளை
இரைகேட்டு நிற்பதனல்—
சாவில்மட்டும் மக்களுக்குச்
சனநா யகம்வழங்கிக்
காவூட்டுப் பலிகேட்கும்
காரணத்தால்—
வினைவிதைப்பார் வினையறுக்கும்
விளைவாம்பே ருண்மைதனை
நினைவுறுத்திப் பார்க்குமொரு
நிலையவர்க்கே வந்ததனல்—
கருமருந்தால், ராணுவத்தால்
கட்டியுல காண்டவர்க்கு
அருமருந்தாம் அகிம்சையெனும்
ஆயுதத்தின் தனிவலியால்,
தருமத்தை, சுதந்திரத்தைத்
தலைநிமிரச் செய்திடுமோர்
மருமத்தை நாமுணர்த்தி
வாகை புனைந்ததனல்—
இருண்ட கண்ட மென்றுசிலர்
இழித்துரைத்த ஆப்பிரிக்கா
சுரண்டலுக்குத் தலைவணங்கிச்
சோம்பும் நிலைதவிர்த்துத்
திரண்டெழுந்து இன்றுஒரு
தீபத்தை ஏற்றியதால்—

அஞ்சு பெரும்பூதம்
அனைத்தின் அணுத்துகளை
விஞ்சுபுகழ் விஞ்ஞானம்
வேறுபடப் பிரித்தாலும்,
நெஞ்சுபிரித் தாளவொரு
நெறியேது மில்லாமல்,
பஞ்சசீலம் என்றுரைக்கும்
பாரதத்தின் பாதையிலே
அஞ்சுகண்ட மக்களெலாம்
அணிவகுக்கும் காரணத்தால்—
மேலைத்திசை முன்னுள்
மேற்கொண்ட மனப்பான்மை
காலைப் பனித்துளிபோல்
கரைந்துஉரு மாறுகின்ற
காலம் அணித்துவரக்
காண்கின்றோம்! காண்கின்றோம்!

12

மேலும் நாம்—
கற்பாந்த கோடிக்
கணக்கிறந்த அண்டாண்ட
அற்புதங்கள் அத்தனையும்
அறிந்தறிந்து மேம்படுமோர்
பொற்கால வாழ்வியலின்
புகுமுகத்தின் வாசலிலே
நிற்கின்றோம்!
வானவெளிச்
சந்திரனில், சுக்கிரனில்,
சப்தரிஷி மண்டலத்தில்

செந்திருப்போல் பெண்ணிருந்தால்
திருமணமும் செய்யுமொரு
சந்ததியைத் தோற்றுவிக்கும்
சகாப்தத்தில் வாழுகின்றோம்.
இந்த நிலையினிலே—
கிழக்கென்றும், மேற்கென்றும்,
கீழென்றும், மேலென்றும்,
உழக்குக்குள் குதிரைகளை
ஓட்டித் திரியாமல்,
வடக்கென்றும், தெற்கென்றும்,
வாழ்வென்றும், தேய்வென்றும்
முடக்கும் பலபேச்சில்
மூச்சைத் தொலைக்காமல்,
அகிலமெலாம் ஒன்றாக,
அறிவால் பெறுஞ்செல்வம்
சகலருக்கும் சொத்தாக,
சாதிமத நிறபேத
முகில்விலக, நவஜீவன்
முக்தர்களாய், சக்தர்களாய்
மகதேவர் தேவியராய்
மாந்தரெலாம் வாழ்ந்திடுமோர்
உலகினிலே நாம்வாழ்வோம்;
உயர்வோம்; புகழ்சுமந்தே
இலகிடுவோம் என்றுரைத்தே
ஏகிடுவேன்.

மறுவணக்கம்!

1959

## 4

# பொங்கல் புதுநாள் : விருந்து

### 1

தைத்திங்கள் தலைநாளில்
தமிழர் திருநாளில்
வைத்த தமிழ்க் கவியரங்கில்
வந்துற்ற அவைத்தலைவ!
அவைத்தலைவர் முன்னிலையில்
அன்னைதமிழ்ச் சொன்னலத்தைச்
சுவைத்தபய னுற்கவிதை
சொல்லவந்த பாவலரே!
பாவலர்தம் கவிதைகளைப்
பைந்தமிழர் கேட்டறியும்
ஆவலினுல் எம்மையெலாம்
அழைத்திட்ட வாஞெலியே!
வாஞெலியாம் பொறிவழியே
வந்தொலிக்கும் தமிழ்க் கவிதைத்
தேஞெழுக்கைக் கேட்டுவக்கும்
தீந்தமிழர் திருக்குலமே!

உமக்கெல்லாம்—
சிற்றம் பலத்தான்நான்
சிரம்தாழ்த்தித் தெண்டனிட்டு
மற்றெனக்கு இவ்வரங்கில்
வழங்கியதோர் பொருளான

விருந்தைக் குறித்தென்றன்
விந்தை மனத்திடையே
இருந்தெழுந் தோங்குகின்ற
எண்ணத்தைச் சொல்வடிவில்
தருகின்றேன். இனிக்கவிதை
தாராள மாய்க் கேட்பீர்!

2

பொங்கல் தனையிட்டுப்
பூசித்தும், வானரங்கில்
சிங்கேறு போற்பவனி
செய்யவரும் சூரியனைச்
செங்கை குவித்திரங்கிச்
சேவித்தும், நாம்மகிழும்
மங்கலநன் ஞளிதனின்
மகத்தை, மருமத்தைச்
சிந்தையினில் நான்சிறிதே
சிந்தித்துப் பார்க்குங்கால்,
சிந்தையெலாம்—
முந்தைக்கும் முந்தியதாம்
முன்னைப் பழம்நாளின்
அந்திக் கருக்கிருட்டை
ஆராய்ந்து, ஒளிகாண
முந்தும்; ஆர்வத்தால்
மூண்டெழுந்து முன்னேறும்

3

அந்நாளில்—
சிந்தையெனும் அற்புதத்தைச்
செயலுக்கோர் துணையாக்கி,

வெந்துயரை மாற்றுமொரு
வெற்றிப் படையாக்கித்
தந்துதவத் தெரியாது
தட்டழிந்து தடுமாறி,
மந்தையராய் மாந்தரெலாம்
வஞந்தரத்து வானரத்தின்
சந்ததியில் வந்ததற்குச்
சான்ருகும் சங்கிலியாய்,
கோட்டுப் பழக்குலேயைக்
கொம்பெறிந்தும் கம்பெறிந்தும்,
காட்டுப் பிராணிகளேக்
கல்லெறிந்தும் வில்லெறிந்தும்,
வேட்டை பலவாடி
வெம்பசியைத் தீர்த்ததுவும்—
அந்திக் கருக்கலிலே
அருக்கன் தலேமறைய,
முந்திப் படையெடுத்து
மூட்டமிடும் காரிருட்டில்
பொந்தில், மரக்கிளேயில்
பொற்றைக் கடவுகளில்
குந்திக் கிடந்தே தம்
குலம்காத்து வந்ததுவும்—
பின்ஞளில்,
அன்னவர்கள்
காட்டு நிலப்பரப்பில்
கதிராய்க் கதித்தெழும்பும்
மேட்டுத் தினேக்கதிரை,
வேருபல தானியத்தைக்

கூட்டிச் சேர்த்துணவாய்க்
கொண்டு, உயிர்வாழ்ந்ததுவும்—
கால் நடையைத் தாம்பழக்கிக்
கள்ளிச்சொட்டுப் போல்துளிக்கும்
பால் சுரக்கும் ஆநிரையைப்
பாலித்துப் பயன்சிறந்து
மேல்நிலையாம் முல்லைக்கே
மெல்லமெல்ல வந்ததுவும்—
நாமறிவோம்; நமைப்பயந்த
நாடறியும்; ஏடறியும்.

4

இவ்வாறாய்—
தளர்ந்தும், உயிர்வாழும்
தாகத்தால், மக்கள்குலம்
வளர்ந்து வளர்ந்தோங்கி
வளம்பெற்று மேலோங்கி,
சிந்தனையால், செய்தொழிலால்,
சிறப்புற்றுச் சீரோங்கி
வந்திட்ட முற்கால
வரலாற்றுப் பாதையிலே,

வானத்துச் சூரியனார்
வழிநடந்த களைப்பாறப்
போனவர்போல் மேற்றிசையில்
போய்மறைந்த பின்னர்வரும்
கன்னங் கருக்கிருட்டில்,
கருஞ்சாந்துப் பொட்டிருட்டில்,
மின்னற் கொடிசொடுக்கி
மினுக்குகின்ற கும்மிருட்டில்

விள்ளத் தெரியாத பய
வேகம் உளமுறுத்த,
உள்ளீரல் தனைத்தொட்டே
உலுப்பும் குளிர்வாட்ட,
பிள்ளைகளும் பெண்டுகளும்
பீதியுற, மாந்தரெலாம்
இரவின் பயங்கரத்தில்,
ஏகாந்தப் பேரமைதிக்
கரவில் உயிர்சுமந்து
கண்கலங்கி நின்றஒரு
காலத்தே—
கீழைத் திசையிருளைக்
கிழித்தே, பெரும்விசிறி
வாழையெனக் கதிர்வீசி
வந்துதித்த சூரியனார்
வரவுதனைக் கண்டறிந்து
வையமெலாம் கண்விழிக்கும்!
இரவின் பயங்கரத்தை
எடுத்தெறிந்து களிப்பெய்தும்!
கொட்டில் பசுக்களெலாம்
குதூகலித்துத் துள்ளாடும்!
வெட்டும் குளிர்மறைந்து
வெதுவெதுப்பு குடிபோடும்!
புள்ளினங்கள் கூட்டமெலாம்
புத்தமுதத் தேனிசையை
வெள்ளம் எனப்பொழிந்து
விண்ணில் பறந்தோடும்!
முத்துப்போல் பனிதுளிக்க
மூடிக் கிடந்தகதிர்

சித்தம் தெளிந்தவர்போல்
சிரித்தே தலைநிமிரும் !
கும்மிருட்டில் கண்மூடிக்
குவிந்திருந்த பூக்களெலாம்
கம்மென்று மணம்வீசிக்
கண்மலரும்; புன்னகைக்கும் !
இம்மட்டோ?
எல்லை கணித்தறியா,
எண்ணும் எழுத்தறியாத்
தொல்லைப் பலவூழி
தொட்டேயிவ் வுலகத்தின்
உயிரினங்கள் அத்தனைக்கும்
உயிராகி, உயிர்புரக்கும்
பயிரினங்கள் அத்தனைக்கும்
பாலாகி, நீராகி
வான மழைவழங்கும்!
வசந்தத்தேன் பூப்பூக்க,
கானமிடும் தும்பிகட்குக்
கட்டியங்கள் கூறிவரும்!

இவ்வாறாய்—
ஒற்றைத் திகிரியினால்
உலகாளும் சூரியனை,
கற்றைச் சடைவிரித்துக்
கதிர்வீசும் ஆதவனைக்
கண்டறிந்த பண்டைமக்கள்
காயத்ரி தேவனவன்
தொண்டை, அருள்சுரக்கும்
துணையை உணர்ந்தறிந்து ,

மந்திரத்தால், மாதவத்தால்,
மாதேவன் அன்னவனே
வந்தித்துத் தொழுதேத்தி
வணங்கிச் சிரம்தாழ்த்தி
வந்திட்ட பரம்பரையின்
வழிவழியாம் வழக்கம்தான்
இந்தத் திருநாளாம்
என்பதுவும் நாமறிவோம்.

5

இஃதேபோல்—
ஆறறிவாம் பேரறிவின்
ஆற்றல் தனையுணர்ந்து
பாரகத்தே வாழுகின்ற
பல்கோடி ராசிகட்கும்
வேறுபட்டு நின்றிலங்கும்
வெற்றித் தனிவழியில்,
வெம்பசியை ஆற்றுதற்கு
வேண்டுமட்டும் நல்லுணவைத்
தம்பலத்தால், தம்முழைப்பால்,
தாம்படைத்துத் தாம்அடையும்
செம்பணியால்,
மானிடர்கள்
ஒன்றைப் பலவாக்கி,
ஓரா யிரம்ஆக்கி,
குன்றுமணித் தானியத்தைக்
கோவர்த் தனமாக்கி
வென்றிகண்ட பேராண்மை
விம்மிதத்தால்,

விரையொன்றைப் பூமியினில்
விதைத்தால், பின்னரங்கு
சுரையொன்று முளைக்காத
சூட்சமத்தைக் கண்டறிந்த
கரைகாணாப் பேருவகைக்
காரணத்தால்—
களைப்பும் கண்ணயர்வும்
கண்டாலும், கைஅயரா
உழைப்பால், விவசாய
உற்பத்திப் பெருக்கத்தால்
தழைத்தோங்கி மானிடர்கள்
தருக்கிநின்ற அறச்செருக்கால்,
சேம நலம்விளைத்த
செய்யை, விளைநிலத்தை,
பூமகளை நன்றியுடன்
பூசித்த வைபவமே
நாம்மகிழ்ந்து கொண்டாடும்
நற்பொங்கல் திருநாளாய்
ஆமென்னும் உண்மையிதை
அறியோமோ நாமெல்லாம்?

6

இவ்வாறாய்—
பண்டுதொட்டே மானிடர்கள்
படைப்புப் பலபடைத்து
உண்டு களித்துவந்து
உழைப்பைப் போற்றுவகை
கண்டு, எல்லையில்லாக்
காலமுதல் வழக்காற்றில்

கொண்டுவந்த பொங்கலெனும்
கொள்கைத் திருநாளில்,
சுற்றம் தனையழைத்துச்
சோறிட்டு விருந்தயரும்
பெற்றிதனை முற்றுறவே
பேசிவிடல் எளிதாமோ?
வேட்டுவராய் நந்தமிழர்
வெங்கான வாழ்க்கைதனை
காட்டுப் புறங்களிலே
கண்டிட்ட நாட்களிலும்
கூட்டுண்டார்! வெறியாடிக்
குரவையெனும் கூத்தாடிப்
பாட்டுண்டார்; பல்லுயிர்க்கும்
பகுத்துண்டார்; சுற்றமொடு
வேட்டுண்டார்; பாதீடாம்
விருந்தோம்பும் பண்பாட்டை
நாட்டு வழக்காக்கி
நாகரிகம் கண்டறிந்தார்!

அந்தப் பழம்பண்பு
அறுபட்டுப் போகாமல்,
செந்தமிழர் பரம்பரையாய்ச்
செய்துவந்த விருந்தோம்பல்
தன்னை எடுத்தோதி
தாரணிக்கே வழிகாட்டும்
முன்னைப் பெருமையெலாம்
சொல்லில் முடிவுறுமோ?

7

உண்டி கொடுத்தவரே
உயிர்கொடுத்தார் ஆவரெனப்

பண்டுரைத்த தமிழ்ச்சங்கப்
பாவலனார் பொன்னுரையும்,—
இந்திரனார் பேரமுதம்
இசைந்தாலும் தனித்துண்ணச்
சிந்தையுளார் ஓர்சிலரின்
செய்கையினால், இவ்வுலகம்
சந்ததமும் வாழுமென்று
சாற்றியவன் நல்லுரையும்,—
இருந்தோம்பி இல்வாழ்ந்து
இருப்பதெலாம் தக்கார்க்கு
விருந்தோம்ப வேயென்னும்
விளக்கம் தனை நமக்குத்
தெரிந்துரைத்த வள்ளுவனார்
திருக்குறளின் கருத்துரையும்,—
அன்னம் பிராணனென்றே
அறைகின்ற வேதமொழிப்
பொன்னை உணர்ந்தறிந்து,
பூவுலக மக்களது
வயிற்றுப் பசிதீர்க்கும்
மார்க்கம் தெரிவதற்காய்,
பயிற்றிப் பலதவங்கள்
பண்ணுமணி மேகலையாள்
வாழ்க்கை வரலாறு
வழங்குகின்ற செய்திகளும்,—
விருந்தோம்பும் பண்பாட்டை
விளம்பும் வளமையெலாம்
தெரிந்தவைதான் ; நாமெல்லாம்
திருநாளாம் இந்நாளில்

விருந்தோம்பு வதும் அந்தப்
பண்பாட்டின் விளைவேதான்.

8

இந்நாளில்—
நந்தம் தமிழ்நாட்டின்
நாலு திசைப்புறத்தும்
செந்தமிழர் பொங்கலிடும்
சீரெல்லாம் நாமறிவோம்.
இல்லம் தனைப்புதுக்கி
எழிற்கோலம் வாசலிட்டு
மஞ்சள் பசுங்குலையும்
மதுரச் சுவைவழங்கும்
செஞ்சொற் கவிதையெனத்
தித்திக்கும் தீங்கரும்பும்,
பச்சைப் பசுங்காய்கள்
பலவும் முன்படைத்து
முத்தாய், நறுமுல்லை
மொக்காய் வெண்மையுறும்
புத்தரிசி தனைக்களைந்து
புதுக்கலத்தில் பொங்கலிட்டு,
பால்பொங்கி வழிந்திறங்கப்
பார்க்குமொரு பரவசத்தில்
மேல்சிலிர்க்க, குலவையொலி
மேலோங்கிக் கலகலக்க,
பெண்டுகளும் பிள்ளைகளும்
பெரியோரும் ஆனந்தம்
கொண்டு குதூகலிக்கும்
கோலாகலம் காண்போம்!

பின்னரவர்—
சுற்றம் தனையழைத்துச்
சோறிட்டு மகிழ்வதுவும்,
அற்றவர்க்கும் மற்றவர்க்கும்
அன்னம் வழங்குவதும்,
வற்ரு வளஞ்சுரக்க,
வறுமையெலாம் சென்ருழிய,
உற்ருரும் ஊராரும்
ஒருயிராய் உளம்மகிழ,
விருந்தோம்பும் பெருவாழ்க்கை
வேட்கைக்கோர் சாட்சியம்தான் !

என்ருலும்—
திருநாளாம் தைப்பொங்கல்
தினத்தில்நாம் செய்வதெலாம்
ஒருநாளின் திருக்கூத்தாய்
ஓய்ந்திடுதல் சரியாமோ?
வீட்டைப் புதுப்பித்து
விளக்கேற்றி வைக்கும்நாம்
நாட்டைப் புதுக்குதற்கும்
நல்வழிகள் காணேமோ?
தூசு தும்பதனைத்
துடைத்தே நம்வீட்டைத்
தேசுபெறச் செய்யுமிந்தத்
திருநாளில், நம்மனத்தின்
மாசு மருக்களைநாம்
மடித்தொழிக்க வேண்டாமோ ?
உழவர் பெருநாளை
உழைப்பின் திருநாளை
அழகுபெறக் கொண்டாடி
அகமகிழும் நம்முளங்கள்

உழவர் குடிநிலைமை
உயரவழி காணுவோ?
உண்டி கொடுத்தவரே
உயிர்கொடுத்தார் என்றெல்லாம்
பண்டைப் பெருமைதனைப்
படியளக்கும் இவ்வேளை
உண்டி கொடுப்பாரின்
உணவைப் பறிப்பாரைக்
கண்டிக்க, நிலைமாற்றக்
கருத்துள்ளம் கொள்ளோமோ?
தும்பைப்பூப் போலிருக்கும்
தூவெள்ளைப் பொங்கலிட்டு
நம்பெரிய திருநாளை
நாவலிக்கும் வேளையிலே,
கொம்பேறி மூக்கனைப்போல்
கொள்ளைவிலை வாணிபம்செய்
வம்பைத் தொலைப்பதற்கோர்
வழிகாண வேண்டாமோ?
செங்கரும்புச் சாறுண்டும்
செஞ்சாலிச் சோறுண்டும்
மங்கலமாம் நன்னளில்
மனமகிழும் வேளையிலே
செங்கரும்புச் சாறளிக்கும்
சீனிக்குப் பட்டுழலும்
சங்கடங்கள் வராதிருக்கத்
தக்கவழி தேடோமோ ?
விருந்தோம்பும் சிறப்பையெலாம்
விளம்புகின்ற இந்நாளில்
அருந்துதற்குக் கூழின்றி
ஐயம் இரந்துவந்து

வருந்துபவர் தொல்லைகட்கும்
வழிகாட்ட வேண்டாமோ ?

9

ஆதலினால்—
தைத்திங்கள் தலைநாளில்
தமிழர் திருநாளில்
வைத்திட்ட கவியரங்கில்
வந்துற்ற பாவலரே !
பாவலர்கள் சொல்லிவரும்
பாட்டின் பொருளையெலாம்
ஆவலுடன் கேட்டுவக்கும்
அன்பான நேயர்களே !
உம்மிடத்தே—
தைபிறந்தால் வழியொன்றும்
தான்பிறக்கும் எனுஞ்சொல்லை
மெய்யுரையாய், அருள்வாக்காய்,
வேதத் திருமொழியாய்
செய்திடவே இப்புனிதத்
திருநாளில் பெருவுள்ளம்
வைத்திடுவீர் என்றுசொலி
வணங்கிவிடை வாங்குகிறேன்.

1960

# 5

# வீறுகொண்ட பாரதம்: வீரம்

1

சீறிவந்து படைமூண்ட சீனர்தமை முறியடிக்க
வீறுகொண்ட பாரதத்தின் வீரமதை விளம்பென்று
கூறிநின்ற வானொலியே! கூட்டுமிந்தக் கவியரங்கில்
சேரவந்த நல்லவரே! செந்தமிழின் பாவலர்காள்!
சிரந்தாழ்த்தி உமக்கெல்லாம் சிற்றம் பலத்தான் நான்
கரங்குவித்தேன்; மற்றினியென் கவிதையினைக் கூறுகின்றேன்.

2

பாரதத்தாய் பெற்றெடுத்த புத்திரர்தம் பரம்பரைக்கு
வீரம்-அது எந்நாளும் விலைமருந்துச் சரக்கல்ல.
வீரமெனில் நமக்கெல்லாம் விளையாட்டாய், உடன்பிறப்பாய்,
ஈரைந்து மாதங்கள் சுமந்தீன்றாள் தானளித்த
பாலோடு சேர்த்துண்ட பண்பாடாய், அவள்பாடும்
தாலேலத் தோடுயிரில் தான்கலந்த நல்லுணர்வாய்ப்
பழகிக் கலந்துவிட்ட பான்மையினைப் பாரதத்தின்
அழகுக் கவிதைசொலும்; அகன்மார்புப் புண்கள் சொலும்.

கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு
முன்தோன்று மறக்குலத்து மூத்தவர்கள் எங்கள்
குலம்!

ஊன்தடியைத் தாயொருத்தி பெற்றாலும், ஒரு
வாளால்

தான்தடிந்து புதைக்குமொரு தமிழ்மரபு எங்கள்
குலம்!

பிறப்பளித்த மணிவயிற்றைப் புலிகிடந்த
பிலக் குகையாய்ச்

சிறப்பளித்துச் செருமுகத்தில் செயல்புரிந்த
தெங்கள் குலம்!

பெற்றெடுத்த தந்தையையும் பிரியமுள்ள
துணைவனையும்

மற்றுந்தன் தனயனையும் மாளக் கொடுத்ததன்பின்
பச்சையிளம் பாலகனைப் பட்டுடுத்தி வேல்
கொடுத்தே

இச்சையுடன் களமனுப்பும் மறத்தாயர் எங்கள்
குலம்!

மார்பில்வடு வாங்கியுயிர் மாள்வதுமே யல்லாமல்
போர்முகத்தில் புறங்காட்டிப் போகாத தெங்கள்
குலம்!

நெஞ்சகத்தில் தைத்தவொரு வேல்வாங்கி நேர்ப்
படுமோர்

குஞ்சரத்தின் மீதெறிந்து குலவையிட்ட தெங்கள்
குலம்!

சேரனென்றும் சோழனென்றும் தென்பாண்டி
வீரனென்றும்

சீராமன் வில்விஜயன் சிவாஜிகட்ட பொம்ம
னென்றும்

நூறு யிரம்பேரை நோன்பிருந்து பெற்றதனுல்
பேரா யிரம்சொல்லும் பெருமைகண்ட மறக்
குலம்தான்!
என்றுலும்—
சோதரர்தம் பூசல்களால், சொந்தக் குரோ
தமதால்,
சாதிமதச் சழக்கால், சாத்திரத்தால், கோத்திரத்
தால்,
பேதலித்துப் பிணக்காடிப் பிளவுண் டிருந்தநமைச்
சூதாக அந்நாளில் அன்னியர்கள் சூறையிட்டுத்
தொண்டடிமை கொண்டுநமைச் சுரண்டிப் பல
காலம்
கண்டுமுதல் கண்டிருந்தார்!
என்றுலும், காலம்வர,
காந்தியெனும் சூரியனின் கதிர்பட்டுக் கண்விழித்
தோம்;
ஏந்தும் அறக்கொடியை எடுத்தோம்;
போர்தொடுத்தோம்.
பேரிமயக் கோடுமுதல் பெதும்பையிளங்
கன்னியவள்
சீரடியின் கோடிவரை, சிந்தையொடு செய
லொன்றுய்
ஓரிமயம் போலெழுந்தோம்; உரிமைதனைப்
பெற்றடைந்தோம்;
பாரதத்துப் பூமியிதன் பழிதீர்த்தோம். சுதந்திரத்
தின்
வீறுகொண்ட பாரதத்தை மீட்டுமிங்கே உருவாக்கி,
நேருவெனும் மேருமலை கூறும்அற நெறிவழியே
போருலகை நாம்வெறுத்து, புல்லடிமைக் கறை
போக்கிப்
பாரதத்தைச் சீரமைத்துப் பணிபுரியும்
வேளையிலே—

எங்கள் இமயமலை, எழிலரசி சகுந்தலையின்
சிங்கக் குருளையொரு சிங்கத்தோ டாடுமலை,
ஏடறிந்த நாள்முதலாய் இந்தியத்தின் எல்லையென
நாடறிந்த கயிலைமலை, நந்தமர்தம் சொந்தமலை,
பொற்கோட் டிமயமெனப் புலவரெலாம் போற்றுகின்ற
கற்கோட்டைக் கயிலைமலைக் காவல் மதிற் புறத்தே—

(வேறு)

கற்பிற் சிறந்த பெருங்கனலை யொரு
காமச் சிறுபுழு தொட்டது போல்
அற்பச் சிறுநாய் வேள்விக் களத்தினை
ஆபாசம் செய்திடப் பார்த்தது போல்,

சோம்பி யிருந்த சிங்கத்தினை யொரு
துட்ட நரிகொல்லத் துணிந்தது போல்
வேம்பெனத் தெரி யாதொரு பேய்குடி
மேவிடப் பார்த்திட்ட விந்தையைப் போல்,

நண்ப னெனச்சொலி நெஞ்சினில் நஞ்சினை
நாளும் வளர்த்திட்ட வஞ்சக ராம்
பண்பை யிழந்திட்ட சீனர்தம் போர்ப்படை
பாரத பூமியிற் பாய்ந்தது வே.

3

மாறுபடும்புலை வார்த்தை சொலும் கொடும்
வஞ்சகர் எம்நிலம் வவ்விடவோ?
ஊறுபடத் திருப் பாரத பூமியின்
உரிமைச் சோதனைக் குற்றிட வோ?

வீறுபடப் பெரும் பேறுபட அவ
தூறுபட யாம் வீழ்ந்திட வோ?
கூறுபடப் பகைநீறுபட ரத்தச்
சேறுபடக் கொன்று வெல்லோ மோ?

சீற்றமுற் றேவரும் சீனரைக் கண்டெங்கள்
சிந்தையின் வீரமும் செத்திடுமோ?
கூற்ற மெனத்தகும் மாற்றலர் முன்னெங்கள்
கொள்கைப் பிடிப்பென்ன குன்றிடுமோ?
ஆற்றல் அழிந்ததோ? மானமும் அற்றதோ?
ஆண்மையும் எம்மில் அகன்றதுவோ?
போற்றிடும் பாரத வீரமும் தீரமும்
பூமிப் புழுதியிற் போயினவோ?

வில்லில் விஜயனும் வீமனும் ராமனும்
வீரன்சி வாஜியும் வீழ்ந்தனரோ?
கல்லும் அவர்பெயர் சொல்லிடக் கேட்குமேல்
காலனைப் போலெழுந் தாடாதோ?
எல்லையிலே இன்று சல்லியம் செய்பவர்
எம்மினை வெற்றிகள் காண்பாரோ?
இல்லையில்லை! அந்தப் புல்லியரைக் களத்
தெற்றி மிதித்துநாம் வெல்லோமோ?

(வேறு)

என்றே பாரதம் முழுமையும் இந்நாள்
ஒன்றாய்த் திரண்டே எழுந்தது!
எண்பது கோடிக் கரமும் எந்தம்
இமயம் காக்க விரைந்தது!

சென்றே பகையை வென்றே முடிப்போம்
என்றே சேனையும் திரண்டது!

குன்றச் சரிவில் குளிர்பனிக் கடவில்
நின்றே போரும் புரிந்தது!

நேருவெனும் சுடர்ச் சூரியனை யவர்
நினைக்கக் குளிரும் பறந்தது!
நெஞ்சத் தெரியும் நெருப்பில் பனியும்
நீராய் மாறிச் சுரந்தது!

'போரெனில் இதுபோர்! புண்ணியத் திருப்
போர்!'
என்றுன் பொன்மொழி சிறந்தது!
புல்லியர் சீனர் வல்லமை யந்தப்
போர்முகம் தன்னில் கரைந்தது!

இளையவ ரெல்லாம் படைமுகம் சேர
மழையெனத் திரண்டு வந்தனர்!
இந்தியத் தாயின் மானம் காக்க
இரத்தம் தானம் தந்தனர்!

வளையொலி மாதர் தலைவரைத் தழுவி
வாழ்த்தொலி கூறி விடுத்தனர்!
வயோதிக ரெல்லாம் போர்முனை செல்ல
வாலிப ராகத் துடித்தனர்!

பாரதம் புரியும் போரிதைக் கண்டு
பாருல கெல்லாம் வியந்தது!
பண்டிதர் நேரு நெஞ்சுரம் கண்டு
பாதகர் கூட்டம் பயந்தது!

திரரைப் பெற்ற பாரதத் தாயின்
திருமுகம் பொலிந்து கனிந்தது!
திருடனை யொத்த சீனமும் வாபஸ்
செய்திட வலிந்து குனிந்தது!

4

(வேறு)

பல்லா யிரத்தடிமேல் பனிமுடியின் உச்சியிலே
கொல்லாமற் கொல்லுகின்ற குளிர்பனியின் மத்தியிலே
பொல்லாத சீனரோடு போர்புரிந்த நம்வீரம்
சொல்லால் வசப்படுமோ? சொல்பொருளும் ஒத்திடுமோ?
என்றாலும் பகைச்சீனர் எண்மரைஓர் தனிவீரன்
கொன்றொழித்த செய்தியதும், குண்டுமழை மத்தியிலே
பீரங்கி களைப்பெற்ற பிள்ளைகள்போல் காப்பதற்காய்
வீரங்கள் காட்டியவர் வெந்திறலும், காரிருட்டில்
ககனத்தின் வழிபறந்து, காயமுற்ற வீரர்தமை
மகனைப்போல் பரிந்தெடுத்து வழிமீண்ட வரலாறும்,
காட்டு வழிகளிலே கால்கடுக்க வழிநடந்து
வாட்டமுற்ற வேளையிலும் வைரநெஞ்சம் குன்றாது
போர்புரிந்த வீரர்கள்தம் புனிதத் திருப்பணியும்
ஓரிரண்டோ? அஃதையெலாம் சொலப்புகுந்தால் ஒய்ந்திடுமோ?
பாவியராம் சீனரவர் பகைமூண்ட காரணத்தால்
காவியத்து வீரரைநாம் கண்ணாலே கண்டறிந்தோம்!
பாரதத்துச் சேனையில்நம் படைவீரர் தாம்புரிந்த
தீரமெலாம் ரத்தத்தால் தீட்டியநற் காவியமாம்!
வீரரவர் தீரத்தால், வெம்போர் தனைவிளைத்த
சோரர்குலம் வாபஸெனச் சொல்லிவிட்டுப் போனாலும்,

பாரதத்தின் மண்ணைவிட்டுப் பகைவர் முற்றும் வெளியேறித்
தீருமட்டும் வேறுதிசை திரும்புகிலோம்! பெற்றெடுத்த
தாயகத்தின் எல்லை முற்றும் தான்மீட்டு, வாகை கொண்டு,
வாயலுக்கக் குலவையிடும் வருநாளும் நாம் காண்போம்!
ஆயுதத்தால் ஆள்பலத்தால் அகிலமதை ஆள வெண்ணும்
பேயர்தமை நாமழிப்போம்! பெருவெற்றி கண்டிடுவோம்!

(வேறு)

இமயக்கொடு முடிமேற் படை
எடுத்தார்தமைத் தடுத்தே
குமையப்படு களத்தேயவர்
கொடுமை முறி யடிக்கத்
தமையேபலி கொடுத்தார் தமை
வாழ்த்தித் தலைதாழ்த்தி
அமையுங்கவி யரங்கில் விடை
கொண்டேன்; அகல் கின்றேன்.

1963

# 6

# எண் சுவைக் கம்பன்: வெகுளி

## 1

உள்ளத்தே உந்தியெழும்
உணர்ச்சிகளின் பல்சுவையைத்
தெள்ளு தமிழ்க் கவியால்
தெரிந்துரைக்கும் பாவலரே!
பாவலர்கள் தெரிந்துரைக்கும்
பாட்டின் சுவையனைத்தும்
ஆவலுடன் கேட்டருளும்
அன்பார்ந்த பெரியோரே!

உமையெல்லாம்—
சேவித்துத் தெண்டனிட்டுச்
சிற்றம் பலத்தான்நான்
கோவம் எனும்வெகுளிக்
குணத்தைக் குறித்தேதோ
பாவித் தெழுதி வந்த
பாட்டைத் தொடங்குகிறேன்.

## 2

பல்லா யிரங்கோடி
பல்கிப் பெருகியுள்ள
எல்லா உயிர்களிலும்
ஏற்றம் மிகுந்தமைந்த

நாமேதான் இவ்வுலக
நாயகமாய், உயிர்க்குலத்துள்
கோமானாய், கோபுரமாய்,
கொடுமுடியாய், வாழ்க்கையினைச்
சேமமுறச் செப்பனிட்டுச்
சிறக்கின்றோம்; செழிக்கின்றோம்.
ஆம். நமக்கு—
அறிவுண்டு; பகுத்தறிந்தே
ஆராய்ந்த சிந்தனையின்
செறிவுண்டு; செறிவாலே
சேகரித்த நல்வாழ்க்கை
நெறியுண்டு; குறியுண்டு;
நியமம் பலவுண்டு.
நாமெல்லாம்—
மானிடராய் அவதரித்த
மாதவத்தால், பிறப்பெடுத்த
பூநிலத்தில் நம்வாழ்வைப்
பொருளுடைய பொருளாக்கி
மேனலங்கள் பெற்றுயர
வேண்டுமெனும் வேட்கையினால்,
இதயத்தே நாமடையும்
எத்தனையோ உணர்ச்சிகளே
இதையெல்லாம்—
உதயமுறச் செய்ததெனில்
ஒருபிழையும் உண்டுகொலோ?

3

எனவேதான்—
மனிதர்களின் புவிவாழ்வை
வளமைபெறச் செய்ததனை

இனிதமைக்க வேண்டுமென்றே
எண்ணிச் செயல்புரிந்த
நல்லறிஞர் புலவரெலாம்,
நம்மவரின் இதயத்தைச்
செல்லரித்து, சீழ்பிடித்துச்
செத்தொழிந்து போகாது
காத்தருளும் நற்பணியில்
காவியங்கள் பற்பலவும்
யாத்திட்டார் என்பதனை
யாரே அறியாதார்?

அன்னவரில்—
நந்தமிழின் கவிதா
நாயகனாய், உலகனைத்தும்
சொந்தமெனக் கொண்டாடும்
சொல்லாற்றல் பெற்றவனாய்,
சிந்தையெனும் மருமத்தின்
சிக்கல் அவிழ்ப்பவனாய்
தருமத்தின் அடிச் சுவட்டைத்
தடம்கண்டு சொல்பவனாய்,
சிறுமைக் குணமறுக்கும்
சிகிச்சைமுறை கண்டவனாய்,
உள்ளத்தே ஊறியெழும்
உணர்ச்சிச் சுவைபலவும்
விள்ளத் தெரிந்தவனாய்
விளங்குகின்ற நம் கம்பன்
செய்துவைத்த ராமகதைச்
செல்வத்தே நவரசத்தைப்

பெய்துவைத்த விந்தையெலாம்
பேசுவதும் எளிதாமோ?

4

புல்லரிக்க, மேனியெலாம்
பூரித்துப் புளகமுற,
சில்லென்று இதயத்துள்
சீதம் குளிர்ந்தோட,
கல்லும் கனிந்துருகிக்
கரையாய்க் கரைந்தழுக,
இன்பம் சுரந்தோட,
இளிநகையும் கிளுகிளுக்க,
துன்பம் துடிதுடிக்க,
தோய்ந்த கருணையுளம்
அன்பில் கலந்தணைந்தே
அத்வைதம் ஆகிவிட,
சிரிப்பு கலகலக்க,
சிறுமை தனைநாணும்
வெறுப்பு முகம் சுழிக்க,
வெந்தெரியும் செந்தழலாய்ச்
சீற்றம் சினந்தெழுந்து
சீறிப் புகைநாறிக்
கூற்றமெனக் கூளிப்பேய்க்
கூத்தாட்டம் போட்டாட,
இத்தகைய—
ஆற்றலெலாம் காட்டி,அவன்
ஆக்கிவைத்த காவியத்தில்
சீற்றம் எனும்வெகுளி
சீறிப் புழுங்குகின்ற

தோற்றமெலாம் ஓர்சிலவோ ?
சொல்லில் தொலைவுறுமோ?

5

அறத்தின் தனிநாதன்
அன்புருவாம் சீராமன்
சிரத்தில் மணிமகுடம்
சிங்காரம் செய்வதனைத்
தந்தை தயரதனுர்
தடுத்தார் எனுஞ்செய்தி
சிந்தைப் பெருவெளியில்
தீயாய்ச் சுட்டெரித்த
காலத்தே, சினம்பொங்கிக்
கண்கள் நெருப்புமிழ,
மூலமே நாசமுற
மூண்டெழுந்த ஊழித்தீ
போலும் வெகுண்டெழுந்து
புடைபுடைத்து, ஆர்ப்பரித்து,
முறைத்துத் தொனித்துறுமும்
மூரிவில்லின் நாணேடும்,
விறைத்துப் புடைத்தெழும்பி
விசித்துநின்ற தோளோடும்,
வெகுளி எனும்குணத்தின்
விசுவ தரிசனம்போல்
தகிதகித்து இலக்குமணன்
தாவிவந்த கோலத்தில்—
அன்னை உரைகேட்டே
அரசன் தனக்கீந்த

மன்னன் பதவியினை
மாபாவம் எனநீத்து,
அண்ணல் தனைமீண்டும்
அழைத்து வரக்கருதிக்
கண்ணில் புனல்வாரக்
கங்கைக் கரைகுறுகிப்
படையோடு வந்தவொரு
பரதன் தனைக்கண்டு,
கடைவாய்ப்பல் கடுகடுக்க,
கட்கடையில் தீப்பறக்க,
உடைவாளைத் தொட்டகரம்
உறுத்து வலித்திறுகக்
கங்கைக் கரைக் கதிபன்
கானக் குகன்நெஞ்சில்
பொங்குமொரு சந்தேகப்
பொருளாலே, கானகத்துச்
சிங்கேறு போல்நிமிர்ந்து
சீறிச் சினம்புகைய,
'இன்னவரும் என்நாட்டின்
எல்லை கடப்பாரோ?
மன்னரெனில் வேடர்சரம்
வாயாவோ? வணங்கிடுமோ?
வேழப் படைமுன்னென்
வில்வளைய மாட்டாதோ?
தோழனென அன்றவரும்
சொன்னசொல்லும் பொய்யாமோ?'
என்றெல்லாம்—
ஊங்கார ஒலியெழுப்பி,
உறுத்துச் சினந்துறுமி,

ஆங்கார மாய்ப்பேசி
ஆர்ப்பரிக்கும் கோலத்தில்—
இன்னபிற—
எத்தனையோ பாத்திரத்தின்
இதயத்தின் சீற்றமெலாம்
சித்திரிக்கும் கம்பனது
சீரையெலாம் இப்படியே
கத்தரித்து ஒட்டவைத்துக்
காட்டில் சரிப்படுமோ?

**6**

சீற்றம் வெகுளியென்றும்,
சினம்கோபம் என்றும் நாம்
சாற்றிப் பழகிவரும்
தன்மைக் குணம்தன்னைக்
கூற்றமென்றும், சேர்ந்தாரைக்
கொல்லியென்றும், அக்குணத்தை
வேரோடு பேர்த்தெறிந்து
வெட்டிக் களைந்தெறியப்
போராட வேண்டுமென்றும்
புகன்றிடுவார் நம்பெரியோர்.
என்றாலும்—
'ஆறுவது சினம்' என்றே
அவ்வைப் பிராட்டியவள்
கூறிவைத்த பொன்மொழியைக்
கோடானு கோடிமுறை
பாரா யணம் பண்ணிப்
பயின்றாலும்,
பாருலகில்

தருமம் தனையதர்மம்
தள்ளி மிதித்தேறி
வருமத்தே வேல்பாய்ச்சி
வாதைப் படுத்துவதும்,
நன்மை நலன்பலவும்
நாசமுற, நச்சரக்கப்
புன்மைக் குணம் இங்குப்
புகழேணி ஏறுவதும்,
ஆன இவையொத்த
அநியாயம் பலப்பலவும்
காணுகின்ற போதுசினம்
காத்தற் கெளிதாமோ?

அண்டை அயல்நாட்டை
அடிமைகொண்டுக் கொள்ளையிடக்
குண்டும், போர்க்கருவிக்
குவையும் சமைத்துவரும்
சண்டாளப் போர்வெறியர்
சதித்திட்ட வேலையெலாம்
கண்டக்கால் நம்வெகுளி
காத்தற் கெளிதாமோ?

பாரதத்துக் கலையுணர்வில்
பதியமிட்டு வளர்ந்தோங்கி
வேர்பரப்பி விகசித்து
விண்நிவர மேலோங்கிச்
செழித்து, ஞானமெலாம்
சிரணித்து, புன்மைகளை
ஒழித்து, நல்வாழ்வு
உருப்பெறுவ தற்குதவும்

தத்துவமும், லட்சியமும்,
தருமத்தின் சூட்சுமமும்,
சத்தியமும் நமக்கருளிச்
சந்ததமும் வாழ்ந்துவரும்
ராமா யணக் கதையை,
ராமனெனும் லட்சியத்தைக்
கோமாளிக் கூத்தர் சிலர்
குறைகூறி, நமையெல்லாம்
ஏமாளி யாக்குதற்கே
எத்தனங்கள் செய்வதுமாய்,

கன்னித் தமிழணங்கின்
கட்டழகின் பெட்டகமாய்,
சன்னத்தாய், அன்னவரின்
சாகா வரம்வாய்ந்த
உன்னதமாம் மேன்மைக்கோர்
ஊர்ச்சிதமாய் நிலவுகின்ற
கம்பனது காவியத்தைக்
காமரசம் என்றுசொலி
வம்பர்சிலர் கூச்சமின்றி
வாந்தி எடுப்பதுமாய்
இன்றும் நிலவிவரும்
இழிதகவு தனைவிரைவில்
கொன்று குழிதோண்டிக்
குலைவையிடும் எம்வெகுளி!

வெள்ளையர்தம் தோலாம்
வெளுப்புக்குச் சலாமிட்டுக்
கொள்ளை யடிப்பதற்குக்
கூட்டாளி ஆனவர்கள்,

கள்ளக் கடைநடத்திக்
காசுபணம் சேர்த்தவர்கள்,
நாட்டை, நாட்டுமக்கள்
நலத்தை, சுதந்திரத்தைக்
காட்டிக் கொடுத்தந்நாள்
கதைநடத்தி வந்தவர்கள்

வீட்டுக்குள் பேய்வந்து
விளையாடப் போந்தாற்போல்,
கூட்டுக்குள் புகுந்திட்ட
கொம்பேறி மூக்கன்போல்,
ஆட்டுக் கிடையூடே
அரணியத்தின் ஓநாய்போல்
நாட்டுமக்கள் தலைவிதியை
நாட்டவரக் கண்டக்கால்
கோட்டைக் கதவுடைத்துக்
குமுருதோ எம்வெகுளி?

## 7

கோவம் எனும் வெகுளிக்
குணம்பற்றி, என்னுளத்தின்
பாவனையின் சிலகருத்தைப்
பகர்ந்திட்டேன்;
என்றாலும்
கோபம் எனும் வெகுளிக்
குணத்தை நாம் காத்திடுவோம்;
குணமென்னும் மாமேருக்
குன்றேறி, கோபத்தைக்
கணந்தோறும் நாமெல்லாம்
காத்திடுவோம்!
காலம் வரும்!
நிச்சயமாய்க் காலம்வரும்.

1957

# 7

# கம்பன்: படை எழுச்சிப் பத்து

### 1

பொல்லாத பசிநோயால் பல்லோர் வாட,
பூதமென ஒருசிலபேர் புதையல் காக்க,
இல்லாராய் உடையாராய் இந்நாள் வாழும்
இழிதகவு இனிமேலும் இருக்கப் போமோ?
எல்லாரும் எல்லாமும் எய்தி, மாந்தர்
இந்திரராய், தெய்வதமாய் இகத்தே வாழும்
உல்லாச வாழ்வியலை உணர்த்தும் கம்பன்
உரிமைப்போர்ப் படையெழுச்சி உதித்தக்
காலே!

### 2

தாழ்வுறுத்தும் துன்பத்தீ தகித்த போதும்,
தகவிழந்தும் உறவிழந்தும் தவித்த போதும்,
வாழ்வெனும்போர்க் களத்தூடே நெஞ்சின்
திண்மை
வயிரத்தைக் கரியாக்கி மடியப் போமோ?
ஆழ்கடல்சூழ் தீவகத்தே அரக்கர் ஊரில்
அடை பட்டும் சிறையிருந்தும் நிறையைக்
காத்தே

ஏழுலகும் புகழ்மணக்க இருந்தாள் ஏற்றம்
இசைத்தவன்தன் படையெழுச்சி இயங்கும்
காலே !

3

செந்திருப்போல் மனையிருக்கப் பிறனில் நாடும்
சிறுமைக்கே பலியாகி ஒழுக்கம் தேய்ந்து
இந்திரன்போல் இராவணன்போல் எவரும் புன்மை
இழிவுக்கும் அழிவுக்கும் இரையாய்ப் போமோ?
இந்தவொரு பிறவியிலென் இதயத் தாலும்
இருமகளிர் தமைத்தீண்டேன் என்ற
வார்த்தை
தந்தவனின் பேராண்மை பாடும் கம்பன்
சதுரங்கப் படையெழுச்சி சார்ந்தக் காலே!

4

குண்டெறிந்து பேதைமடக் கொடியார் தம்மை,
குருத்தவிழாக் குலக்கொழுந்தை, விருத்தர்
தம்மைக்
கண்டதுண்ட மாக்கிடும்போர் வெறியர் ரத்தக்
காட்டேரி போலுலகில் அலையப் போமோ?
பெண்டுதனைச் சிறையெடுத்த பகைவன் தோற்றும்,
பேரருளால் இன்றுபோய் மீண்டும் நாளைச்
சண்டையிட வாவென்று தருமம் காட்டும்
தமிழ்க்கவிஞன் படையெழுச்சி தரித்தக்
காலே !

5

சீமைமொழிக் காவியங்கள் போலும் நூல்கள்
செந்தமிழில் உண்டுகொலோ? கிரேக்க நாட்டு

ஹோமரையும் மிஞ்சுகின்ற கவிஞன் உண்டோ?
உணர்த்துமென எவரேனும் உரைக்கப்
போமோ?
நாமகளை ஏவியவள் ஆடல் காணும்
நட்டுவனாய்!காவியத்துப் புலவோர்க்
கெல்லாம்
கோமகனாய் ராமகதை படைத்த கம்பன்
கொடிபறக்கப் படையெழுச்சி கொள்ளுங்
காலே!

## 6

வீரியனாம் ராவணனை இகழ்ந்து வீழ்த்தி,
வீடணனாம் துரோகிதனை வாழ்த்தும் கம்பன்
ஆரியர்தம் மாயைக்கோர் அடிமை என்றே
அண்ணாவும் ஐயாவும் அரற்றப் போமோ?
ஆரியனோ? திராவிடனோ? அயலான் பெண்மேல்
ஆசைவைப்பின் தமிழ் அவனை அழிக்கும்
என்றே
பாரறியத் தமிழ்ப்பண்பைப் பரவும் கம்பன்
படையெழுச்சி புடைபுடைத்துப் பாய்ந்தக்
காலே!

## 7

சாதியென்றும் இனமென்றும் பகைத்தீ மூட்டி,
சமர்விளைத்துப் பிரித்தாளச் சதிகள் செய்யும்
பாதகர்தம் பகற்கனவு பலிக்கப் போமோ?
பஞ்சைமக்கள் தமக்குள்ளே பகைத்தல்
ஆமோ?

நீதியின்பால் நிற்பாரேல் குரக்கு வேந்தும்
நிருதர்குலத் திளங்கோவும் வேடன் தானும்
சோதரராம் என்றுரைத்த கம்பன், எங்கள்
தோழன்அவன் படையெழுச்சி தோற்றுங்
காலே!

8

சூதுசெய்தும், வாதுசெய்தும், தொல் அறத்தைச்
சுட்டெரித்தும், வஞ்சித்தும், சோரம் போயும்
ஏதுசெய்தும் ஆதிக்கம் எய்தும் சூழ்ச்சி
இனிமேலும் நம்மிடையே இருக்கப் போமோ?
தாதையின்சொற் படியரசு துறந்த தேவை,
தாயளித்த பதவியினைத் துறந்தே அண்ணன்
பாதுகையைச் சுமந்தானின் பண்பைப் பாடும்
பாவலவன் படையெழுச்சி பலித்தக் காலே!

9

கறைபடிந்த கொடும்பாவக் கரங்க ளோடு
கைகுலுக்கி, உறவாடி, கட்சி சேர்த்து,
பறைமுழக்கி, பழங்கதையே பேசிப் பேசிப்
பசப்பிடுவோர் சூழ்ச்சியினிப் பலிக்கப்
போமோ?
அறம்பிழைத்தான் உடன்பிறந்த அண்ணன் என்றே
அவர்துறந்து நல்லறமே துணையாக் கொண்டு
சிறந்தவனும் வீடணனைப் போற்றும் கம்பன்
செருமுகத்தே படையெழுச்சி கிளர்ந்தக்
காலே!

## 10

ஆள்பலத்தால், ஆணவத்தால் நோட்டை அள்ளி
அள்ளிவிடும் பணபலத்தால், நாளும் நம்மைத்
தாள்பணியச் செய்திடலாம் என்னும் சிந்தை
தருக்குகின்ற சதிக்கும்பல் தரிக்கப் போமோ?
வாள்பலமும், தோள்வலியும், தெய்வம் தந்த
வரபலமும் பெற்றிருந்த இலங்கை வேந்தும்
தூள்பறக்கும் அறத்தாற்றைச் சொல்லும் கம்பன்
தொண்டரெலாம் படையெழுச்சி துணிந்தக்
காலே!

1958

# 8

# கம்பன் வடித்த பண்புகள்: கடமை

1

கன்னித் தமிழ்பாடிக்
கம்பன் புகழ்வளர்க்கும்
சந்நிதியின் முன்னிருக்கும்
சபையோரே! அவைத் தலைவ!
சொன்னலம்சேர் கவிபலவும்
சொல்லவந்த பாவலரே!
உமையெல்லாம்—
சென்னி தனைத் தாழ்த்திச்
சேவித்தேன்; என் கவிதை
தன்னையினி உங்களின்முன்
சாற்றத் தொடங்குகிறேன்.

2

கம்பன் வடித்தெடுத்துக்
காட்டுகின்ற பண்புகளின்
செம்பகுதி பலப்பலவும்
தெரிந்துரைக்கும் கவியரங்கில்,

தம்பி! நீ அதிற்கடமை
தனைப்பாட வேண்டுமெனச்
சம்பிரம மாய்க்கடிதம்
தட்டிவிட்டார் செயலாளர்.
அண்ணன் கணேசனிடும்
ஆணையிது! ஆதலினால்
எண்ணம் பிறிதின்றி
ஏற்பதுவே என்கடமை
என்றே கருதியநான்
ஏமாந்தேன்; தட்டழிந்தேன்.

3

ஏனென்றால்—
இன்றைக்கோ
உரிமை கடமையென்றும்,
உண்மை திண்மையென்றும்,
பெருமை அருமையென்றும்
பெரும்பேச்சுப் பேசுமிந்த
தருணத்தும்,
இவையெல்லாம்
கரு-மையாய், கண்-மையாய்
கடை-மையாய் மாறிவரும்
சிறுமைகளைத் தானேநாம்
தினந்தினமும் கண்டறிந்து
வருகின்றோம்! எனில் இந்த
வார்த்தை பிழை ஆமோ?

4

இந்நிலையில்—
கடமையெனில் அப்பொருட்கே
கட்டளைக்கல் எப்பொருளோ?

கடமையெனும் சொல்லுணர்த்தும்
கருத்தெதுவோ? என்றெல்லாம்
அடம்பிடித்தென் இதயமெலாம்
அலைக்கழிய, அலமருக,
புடம்போடும் குகைத்தீயாய்ப்
புழுங்கிப் புகைந்திட்டேன்.
இடம்ஏவல் பொருள் இவற்றுக்
கேற்றாற்போல் கடமைதனைத்
தடம்புரட்டி, தன்னலத்தைத்
தற்காத்து, தருமியர்போல்
படம்காட்டிப் பசப்புகின்ற
பம்மாத்துக் காரர்சிலர்
உடம்பெடுத்த புண்ணியத்தால்
உயிர்சுமந்து, நம்மிடையே
நடம்புரிந்து களிப்பதெலாம்
நாமறியாச் செய்திகொலோ?
என்றே மனம் சலித்தேன்;
இளைத்திட்டேன்!

இந்நிலையில்
கன்றுதனைப் பரிந்தழைக்கும்
காராம் பசுவினைப்போல்,
குன்றித் துவளுமொரு
கொடிநிமிரச் செய்யவந்த
தென்றலைப்போல் தேடிவந்த
தெய்வதம்போல், ராமகதைப்
பாத்திரங்கள் கடமையெனும்
பண்புக் கிலக்கணமாய்,
சூத்திரமாய் விளங்குகின்ற
சூட்சுமத்தைக் கம்பன்து

பாத்திறமே எடுத்தோதப்
பார்த்தேன்; மனங்களித்தேன்.

5

சத்தியத்தால், ரத்தத்தால்,
சதையால், எலும்புகளால்,
பத்தியத்தால், சிறைவாழ்வின்
பல்லாண்டுத் தவபலத்தால்,
சொத்திழந்தும், சுகமிழந்தும்,
சுதந்திரத்தை இழக்க விடாச்
சித்தத் துறுதிநலம்
சித்தித்த பக்குவத்தால்,
கொத்தடிமை வாழ்வதனைக்
குடியோடச் செய்தவரை—
தேசவிடு தலைவேள்வித்
தீயில் தமைத் தாமே
ஈசலெனப் பலியாக்கி,
ஈன்றெடுத்த தாய்நாட்டின்
மாசு துடைத்து, அவள்தன்
மானத்தைக் காத்தவரை—

ஏணிப் படியாக்கி
ஏறிவந்த பேர்வழிகள்,
தோணித் துடுப்பாக்கித்
தூக்கி எறிந்தவர்கள்,
நாணைத் துறந்து சுய
நலம் போற்றி வாழ்ந்தவர்கள்,
தேச விடுதலைக்காய்த்
திரணமென உயிர் விடுத்தோர்

ஆசைக் கனவுகளை,
அரசியலின் லட்சியத்தைத்
தூசாய், சிறு துரும்பாய்,
துகளாய், சூக்குமமாய்,
நாசமுறச் செய்துவிட்டு
நாடாள வந்தவர்கள்
ஆட்சி செயும் லட்சணமும்
அரசியலின் லட்சியமும்
காட்சியினுல் நாமறிவோம்.
கடமைக்கே இக்காட்சி
சாட்சியமாய் ஆயிடுமோ?
சரிக்கட்டிப் போயிடுமோ?

பட்டம் பதவியெனும்
பவிசுக்காய், நாடாளும்
சட்டசபை ஆசனத்தில்
சாய்ந்திருக்கும் சொகுசுக்காய்,
துட்டுப் பணம் சேர்க்கும்
சுளுவான சூழ்ச்சிக்காய்,
லட்டுப்போல் காண்ட்ராக்டும்
லைசென்சும் பெறுதற்காய்,
வட்டமிட்டும், திட்டமிட்டும்
வாக்குறுதி களையள்ளி
விட்டெறிந்தும், வாக்குரிமை
வேட்டைகளும் ஆடுவதை,
திட்டப் படிவெற்றி
தேடிவிட்டால், முன்னுரைத்த
கட்டுரை களையெல்லாம்
காற்றில் பறக்கவிட்டு,

மறியாட்டு மந்தையென
மக்கள் தமைமதித்து,
வெறியாட்டம் போட்டாட
வேட்கைபலர் கொள்ளுவதை
அறிவோம்! அவர்சூழ்ச்சி
அனைத்தையுமே அனுபவத்தில்
இன்றைக்கும் கண்டறிவோம்!
இஃதெல்லாம் கடமையெனும்
நன்றுமோர் பண்புக்கே
நஞ்சல்லால் வேறுமோ?

6

என்றாலும்—
என்றோ, எப்போதோ
ஈந்த இருவரத்தில்,
ஒன்றால் தனதுமகன்
உலகாள, மற்றொருவன்
சென்றேகிக் கானுளச்
செப்புகின்ற சொல்கேட்டும்,
வென்றிமகன் காடாள
வெளியேறின் அக்கணமே
பொன்றும்தன் ஆவியெனப்
புரிந்தும், வரம் கேட்ட
நாக்கை இழுத்தறுக்கும்
'நாகரிகம்' தெரியாமல்,
வாக்குறுதி யை விழுங்கி
வாழாமல், வாய்மைதனைக்
காக்கத் துணிந்துயிரைக்
காவு கொடுத்தவன்தன்

போக்கை நாம் புரிந்தால்,
பொருள்தேர்ந்தால், கடமையெனும்
நோக்கத்தின் பண்பதனை
நொடியில் தெரியோமோ?
மேலும் நாம்—
திக்கனைத்தும் புகழ்மணக்க,
செயத்திருவின் அருள் விளங்க,
சக்ரவர்த்தி யாயுலகைத்
தனியாளும் தன்மையிலும்,
மக்களையே உயிரென்றும்,
மன்னவனே அந்தவுயிர்
புக்குக் குடிபுகுந்த
புகலிடமே எனுங்கொள்கை
மிக்கோங்கும் அரசியலால்
மேலோங்கும் தயரதனும்
தக்கோனே அரசியலின்
சரியான கடமைக்கே
இக்காலும் லட்சியமாம்
என்பதையும் உணரோமோ?

7

இறைமகுடம் தனையிழந்து
இராகவனார் கானேக,
கறைபடியாத் தன்வாய்ச்சொல்
காத்தவனும் வானேக,
முறைதிறம்பி வருமகுடம்
முள்முடியாய் நெஞ்சுறுத்த,
தாயவளின் பேயுரையால்
தாதையவன் தந்தநிலம்

தீயதுவாம் என்றுணர்ந்து
தீர்ந்தவுளத் தன்மையனுய்,
தூயவனும் ராமனின்கால்
தூசிபடிப் பாதுகத்தை
ஆயதோர் அரியணைமேல்
அரசுகொள வீற்றிருத்தி,
பாயலொடு ஊணுறக்கம்
பலப்பலவும் நீத்தவனுய்,
சிந்தியகண் ணீரோட
சிரிப்பிழந்து முகம் வாட,
நந்தியெனும் சிறுபதியில்
நற்றவத்த னுயிருந்த
பரதனெனும் நம்பியவன்
பண்பாட்டில், கடமையொரு
விரதமென, நோன்பென்ன
விளங்குமொரு மேம்பாட்டுத்
திறமும்நாம் கண்டுணர்ந்து
தெளிவுறவும் ஏலாதோ?
கிட்டரிய பெருஞ்செல்வம்
கிட்டிவந்தும், அஃதறத்தை
வெட்டிவந்த காரணத்தால்
வேண்டேன் எனவுரைத்த
கட்டுறுதி யால்பரதன்
கணித்தறிந்த கடமைதனைச்
சுட்டெரித்து வாழ்கின்ற
சூதர்களும் உண்டுண்டு!
ஆதலினுல்—
அவரெல்லாம்
பட்டம் பதவிக்காம்

பந்தயத்தில், தமக்குள்ளே
முட்டித் தலைமோதி
முறைத்தே உறுமுவதும்,
போட்டி, மனப்பூசல்
பொறாமை, பொச்சரிப்பால்
கோட்டைக்குள் குத்திவெட்டிக்
குடுமி தனைப் பிடித்தே
ஆட்டங்கள் போடுகின்றார்!
ஆள்பிடித்து, அச்சடித்த
நோட்டால், ஒன்று பத்து
நூறால், ஒருவேளைப்
பாட்டுக்குத் தாம்போடும்
பருக்கைச் சிறுசோற்றால்
ஆட்டிவைத்து, இவ்வுலகை
ஆள நினைப்பவர்தம்
கோட்டியதோர் உள்ளத்தின்
கொள்கைதனைக் கடமையெனக்
கூட்டத்தில் பலநாட்கள்
கூறி, வருங் காலத்தை
ஓட்ட முடிந்திடுமோ?
உலகும் பொறுத்திடுமோ?

8

இவ்வாறாய்—
கடமை உணர்ச்சியெலாம்
கதையாய், கற்பனையாய்,
உடமைக்கும், செல்வபலம்
உற்றார்தம் காலடிக்கும்,

மடமைக்கும், இதயத்தை
மலிவாக்கும் சிறுமைக்கும்
அடமானம் ஆக்கிவிட்ட
அவலத்தை, நம்வாழ்வின்
கெடுமான மாய்த்தோற்றும்
கேவலத்தைக் காண்கின்றோம்!

மற்றோர் பால்—
வாரியுயிர் குடிக்கவரும்
வஞ்சனையே யானாலும்,
நேரியதாம் வாய்மையினை
நிலைநிறுத்திச் சாவாரும்,
சீரியதோர் அறநெறிக்குத்
திறம்புமொரு செல்வம் அது
ஒருலகே யானாலும்
ஒப்பேன் எனவுதறும்
பேரருளால், நல்லறத்தைப்
பேணி வளர்ப்பவரும்,
ஓரிருவர் இவ்வுலகில்
உலையாத, கலையாத
வீரர்களாய், அறம்தெரிந்து
வினையாற்றும் கடமைதனை
ஊரறிய, உலகறிய
உணர்ந்து நிறைவேற்றுவதும்
பார்க்கின்றோம்! ஆதலினால்,
பாவம் அறத்தொலையும்!
மாரி வளம்சுரக்கும்!
வையம் தழைக்கும்! இன்று
வீரியங்கள் பேசி, வினை
விதைப்பார்க்கு வினையாமோர்

பேரி கொட்டும்! அற வாழ்வைப்
பேர்த்தெடுக்க முயன்ருேரை
வாரியுண்ணும் பிரளயத்தில்
வாகை மலர் சொரியும்!
காரைக் குடிநகரின்
கண்ணியரே! இவ்வுண்மை
நேரும் ஒரு நாள்! இஃது
நிச்சயம்! என் றேயுரைத்துப்
பேருகின்றேன் சபையோரே!
உமக்கோர் பெரு வணக்கம்!

1959

# 9

# கம்பன் கண்ட சமயக் கருத்து: வேதாந்தம்

கம்பனின் சமயத் தேட்டக்
கடலதன் கரையைத் தேடும்
வம்பதில் எம்மை மாட்டி
வைத்தவர் தமக்கும், எம்போல்
நம்பியே மோசம் போன
நண்பர்க்கும், பிறர்க்கும் இந்த
அம்பலக் கவிஞன் இந்நாள்
அஞ்சலி முதலில் செய்தேன்.

சைவத்தை, பௌத்தம் தன்னை,
சமணத்தை, மற்றும் மாலாம்
தெய்வத்தின் மதத்தைச் சொன்னான்
என்றெலாம் தேர்ந்தார்; ஆனல்
உய்வகை யுணர்த்தும் வேதத்
துச்சியாம் உபநி ஷத்தும்
கைவரப் பெற்றான் கம்பன்
என்பதும் காணப் போமே!

விண்ணினில், நீரில், வெற்று
வெளியினில், வளியில், தீயில்,
மண்ணினில் எல்லாம் தன்னை
மறைத்துருக் கரந்து நின்றே

உண்ணிறைந் தொளிரும் வேதத்
துறுதியாம் பொருளைத் தானே
பண்ணினிற் கம்பன் பாடிப்
பரவினன் என்றே காண்போம். 3

வித்தின்றி மரமொன் றில்லா
மருமத்தை விளக்கும் மூல
தத்துவ விசாரம் செய்து,
தவசியர் உணர்ந்து சொன்ன
சத்தியப் பொருளை, வேத
சாரத்தை யெல்லாம் கம்பன்
கைத்தலத் தொன்றும் நெல்லிக்
கனியெனக் கண்டான் அன்றோ? 4

மூவிலைச் சூலத் தானும்,
முளரியின் அயனும், பாம்பின்
மேவிய அரியும் தோற்றம்
மேவுதற் கெல்லாம் மூத்த
தூவெளிப் பொருளை, சித்தத்
துள்ளுணர் துரியா தீதச்
சேவடி மலரை யன்றோ
கவிதையிற் சிக்கச் செய்தான். 5

அப்பிடைக் கரைந்து தோற்றம்
அழிந்துரு மறைந்து தேய்ந்த
உப்பினைப் போலும் என்றே
உபநிட நூல்கள் ஓதும்
அப்பொருள் தன்னை யன்றோ
அண்ணலின் கதையில் கம்பன்
செப்பினன் என்னும் உண்மை
பரக்கவே சிறக்கக் காண்போம். 6

பருப்பொருள் உலகிற் காணும்
பல்லுயிர்த் தொகுதிக் குள்ளும்
கருப்பொருள் என்னப் போந்து
காணுமோர் உண்மை தன்னைப்
பொருப்பினிற் சரயு தோன்றிப்
புலங்களிற் புகுந்து பாயும்
திருப்பெருக் கதனில் நாமும்
தெளிவுறக் கம்பன் தேர்ந்தான். 7

கவந்தனும் விராதன் தானும்
கட்டுடல் உகுத்து, செய்த
பவந்தனை நீத்து, இராமன்
பதமலர் தொழுத காலை
தவந்தரு வடிவாய் நின்ற
தருமத்தின் மூர்த்தம் தன்னில்
நவந்தரு வேதத் தந்த
நாதனை யன்றோ கண்டார்! 8

உரந்தனிற் புகுந்து தைத்த
வாளியை உருவி வாங்கிக்
கரந்தனில் ஏந்தி, நெஞ்சத்
தாணவம் கழன்று சோரச்
சிரந்தனைத் தூக்கி, வாலி
கண்ணுற்ற செம்மல் தானும்
நிரந்தர னுன வேதத்
தந்தனுய் அன்றோ நின்றான்! 9

நாகத்தின் பாசம் தர்ம
நாயகன் தவிர்ந்த ஏனோர்
ஆகத்தைப் பிணித்த காலை
பறவைகட் கண்ணல் வந்து

சோகத்தைத் தவிர்த்து, வள்ளல்
துய்யதாள் தொழுத போதும்
ஏகத்தின் வடிவாம் வேதத்
திறுதியை யன்றோ கண்டான்! 10

இரணியன் இழைத்த துன்பம்
யாவையும் இதயம் தாங்கி
முரணிய சிறுவ ஞன்
மூதறி வாளன் அந்தக்
கரணத்துள் உணர்ந்து கண்ட
கடவுளும் வேதம் யாவும்
சரணெனப் போந்த மூல
தத்துவப் பொருளே யன்றோ? 11

மானிடத் தோற்றம் தாங்கி,
மன்னர்தம் மகனுய்த் தோன்றி,
கானிடைத் தவங்கள் நோற்று,
காதலி தன்னைத் தோற்று,
கூனுடைக் குரக்கின் கூட்டத்
துணையொடு கொடியார் தம்மைத்
தானறத் தொலைத்த அந்தத்
தருமத்தின் கரும யோகி 12

மானுடைக் கரத்தான் அல்லன்;
மாலுமே அல்லன்; தேவர்
கோனலன்; முகங்கள் நான்கு
கொண்டவன் அல்லன்; ஆனல்
வானவர், தேவர், மூவர்
யாவர்க்கும் முதலாய், மூப்பாய்
ஆனதோர் அனைத்தின் மூல
தத்துவம் ஆவான் அன்றோ? 13

(வேறு)

வில்வாங்கிச் சீறி, வெம்பகை நூறி,
விம்முறப் பெற்றுரு மாறி,
கொல்வானு மாகி, கொன்றே குவிக்கும்
கோடானு கோடியும் ஆகி,
பல்வாதம் செய்யும் சமயாதி வர்க்கம்
பரவிடும் லட்சியம் ஆகி
இல்வாதம் செய்யும் இரணியன் சொல்லும்
இசையிலா வசையுமே ஆகி, 14

ஆவதும் ஆகி, அழிந்துரு மாறிப்
போவதும் ஆகியே, ஆவி
ஈவதும் ஆகி, ஈந்ததை ஏந்தி
இன்புறும் சீவனும் ஆகி,
சாவதும் ஆகி, சனிப்பதும் ஆகி,
சர்வமும் தன்வயம் ஆகிப்
போவது மான தேவதம் தானே
சேவடி மண்ணுற வந்தான்! 15

காலமும் தூரக் கணக்குமே எல்லை
காணுதற் கரியதாம் ஆதி;
தூலமும் தோன்றாச் சூக்கமும் ஆகித்
தோற்றாது தோற்றிடும் ஜோதி;
ஆலமும் வித்தும் போலுமாய் அண்டம்
யாவையும் ஆகிய நேதி;
நீலமா மேக நிறங்கொடு வந்து
நெறிகாட்டி நின்றிட்ட நீதி! 16

முன்னோடு பின்னும், முடிவோடு நடுவும்,
முதலுமே இல்லாத மூலம்;

தன்னேடு தானும், தானுக்குள் யாவும்
தான்தோன்றி யாகிய ஜாலம்;
மின்னேடும் விண்ணும் மண்ணேடு மாகி
வீங்கிய விம்மிதக் கோலம்;
மன்னுதி மன்னன் மகனுகத் தோன்றி
வழிகாட்டிச் சென்றிட்ட சீலம்! 17

அல்லோடு பகலும் அருளோடு மருளும்
அனைத்துமே தானுன ஏகம்;
சொல்லோடு பொருளும், சுதியோடு சுரலும்
சுவைகூடித் தேனுன ராகம்;
நல்லோர்தம் உள்ளப் பெருங்
கோவில்கொள்ள
நாளுந் தவிக்குமா மோகம்;
வில்லேந்திச் சென்று, விளையாடி நின்று
வினைதீர்த்த கார்வண்ண மேகம்! 18

கருவாகித் தோன்றும் உயிர்யாவி னுள்ளும்
திருவாசம் செய்திடும் ஜீவன்;
எருவாகிப் போன பிடிசாம்ப லுள்ளும்
கரியாகி நின்றிடும் தேவன்;
அருவாகிக் கண்ணில் தெரியாது நிற்கும்
அதிரேக மாகுமா மாயன்;
உருவாகித் தோளில் சிலைப்பாரம் தாங்கி
உத்தண்ட மாகிய தூயன்! 19

நெருப்போடு புகையும் நீரோடு திரையும்
நிழலோடு வெயிலுமாய்க் காண்பான்;
விருப்போடு பகையும் விதியோடு மதியும்
வேறுபா டில்லாமை பூண்பான்;

உருப்போடும் ஒல்லைத் திருப்போத வேதத்
துட்பொருள் எல்லையும் ஆவான்;
தெருப்பாதை தன்னில் தவச்சீரை பூண்டு
திருப்பாதம் நோகவும் போவான்! 20

திருநாமம் கோடிப் புகழ்பாடி நின்றும்
ஒருநாமம் இல்லாத உருவான்;
குருநாதர் பல்லோர் தருஞான மெல்லாம்
குறுநகை ஒன்றிலே தருவான்;
பெருநாச காலர் கரமோங்கும் வேளை
பிரளயம் போலவன் வருவான்;
செருநாடி நின்று பகையாடி வென்று
சீராம னுய்ச் செய்கை புரிவான்! 21

(வேறு)

சுருதி யாவையும் சொல்லும் எல்லையில்
தோற் றிடும்பரி பூரணம்;
கருது சிந்தனை விரத மாதவர்
கண்டு ணர்ந்திடும் காரணம்;
நிருதர் கோனவன் தலைகள் பத்தையும்
நிலம் படுத்திய மாரணம்;
பருதி வானவன் மரபிலே சிறு
பாலனுய் வரும் வாரணம்! 22

கரும மாகியும் கருமமே தரும்
பயனு மாகிய காட்சியான்;
தரும மாகியும் தருமமே தரும்
தகவும் மேவிய ஆட்சியான்;
மரும மாகிய ஜனன சாகர
மருள றுத்திடும் மாட்சியான்;

கரும வீரனாய், தரும தேவினைக்
காவல் மீட்டிய சாட்சியான்! 23

உலக மாக்கலும்,நிலைபெ றுத்தலும்,
ஊழியா யதை நீக்கலும்,
அலகி லாவிளை யாட்டெனக் கொளும்
அதிப னேஅறங் காக்கவும்,
கலக மேபுரி நிருத ராட்சியைக்
கருவ றுக்கவும், நீக்கவும்
இலகி டும்எழில் ராமனாய் பிறப்
பெய்தினான்; சரம் ஏவினான்! 24

அறிவி னல்அளந் தறிகிலா ததோர்
அறிவி னன்தனை ஆத்துமச்
செறிவி னல்உணர்ந் தணுகி லார்பரம்
சேர்கி லார்எனச் செப்பியே
குறியி னல்திரு மறையெலாம் பொருள்
கூறமுற் படுங் கோலமே
மறுவி லார்கு நாதனாய் ஒரு
மனித னாய்உரு மாறுமால்! 25

மலரிலே மணம், மதுவி லேவெறி,
மணியி லேஒலி, மாமதி
நிலவி லேஒளி,நீரி லேகுளிர்,
நெருப்பி னிற்சுட லாயமர்ந்
துலவி யேவரும் தலைவ னேவரி
சிலைவ ளைத்துவை தேகியைக்
குலவி யேமகிழ் கொழுந னாய்த்திருக்
கோசலம் குடி போயினான்! 26

(வேறு)

என்றெலாம் கம்பன் நம்முன்
　　எடுத்தெடுத் தியம்பும் பண்பை
இன்றெலாம் வியந்து கொண்டே
　　யிருக்கலாம்; எனினும் என்றன்
பின்ருெடர் நண்பர் உண்டே!
　　அவர்க்கெனப் பெயர்வேன்! இந்த
மன்றுளோர் தம்மை மீட்டும்
　　வணங்கினேன்; விடையும் கொண்டேன்!

1960

# 10

# கம்பன்: அரசியல் அறிஞன்

1

காரைத் திருப்பதியின்
கம்பன் திருப்பணியில்
சேரவந்த நல்லோரே!
செந்தமிழில் நற்கவிதை
கூறவந்த பாவலரே!
கூட்டுவித்த கவிவாணர்
அரங்கின் தலைவரென
அமைந்த தமிழ்க்கடலே!
உமையெல்லாம்—
கரந் தூக்கிச் சேவித்தென்
கவிதையினைக் கூறுகின்றேன்.

2

ஆறு துறையவற்றில்
அரசியலில் நம்கம்பன்
தேறியவன் என்பதைநீ
தெரிந்துவந்து கவியரங்கில்
கூறிடுவாய் என்றென்னைக்
கூண்டேற்றி விட்டுவிட்டார்!
ஆரிடத்தில் நானிந்த
அவஸ்தையினைப் போயுரைப்பேன்?
காரணமா?—நீங்களெலாம்
கண்டறிந்த வளமுறைதான்.

அரசியலின் பேராலே
ஆர்ப்பாட்டம் செய்துபல
வரிசையிட்டுக் கூத்தாடி
வலந்திரியும் புன்மைகளை
உரைசெய்தல் சாத்தியமோ?
ஒன்றிரண்டில் முற்றிடுமோ?

இன்றைக்கு—
தேர்தல் நெருங்கிவரும்
தேதி சுருங்கிவர,
மார்தட்டி, தோள்தட்டி,
வக்கணைகள் பேசிவரும்
பேர்வழிகள் கொள்கையெனும்
பேராலே பற்பலவாம்
போர்வையிலே நம்முன்னே
புகுந்தாட்டம் போடுவதும்
பார்வையிலே அன்றாடம்
படுவதுதான்!
அவரெல்லாம்
ஓட்டுப் பிடிப்பதற்காய்
உறவாடிப் பேசுவதும்,
பாட்டன் முப்பாட்டன்
பழமையெலாம் செப்புவதும்,
வீட்டுநடை ஏறிவந்து,
வெற்றிலையும் போட்டுவிட்டு,
'சீக்குக் குணம்தானு?
சித்தப்பார் இடமிருந்து
தாக்கலுண்டா? பரீட்சையிலே
தம்பிக்குப் பாஸாச்சா?

மூத்தமகள் கலியாணம்
முடிவாச்சா? ஆகலியா?
ஆத்தாள் சௌக்கியமா?
அய்த்தை மகன் பொய்த்தானு?'
என்றெல்லாம்—
வாக்குரிமைச் சீட்டினிலே
வைத்தகுறி தப்பாமல்
காக்காய் பிடிப்பதுவும்,
கைமேல் அடிப்பதுவும்,
நாக்கினிலே தேன்வழிய
நல்வார்த்தை பேசுவதும்,
சித்திர குப்தனுக்கும்
சிமிட்டாக் கொடுத்துவிட்டுச்
செத்தாரை, மண்ணுகிச்
செல்லாகிப் போனவர்க்குப்
புத்துயிரைத் தானளித்துப்
பொய்ச்சீட்டுப் போடுதற்காய்ச்
சத்திரத்துப் பண்டாரச்
சாமிகளைத் தேடுவதும்,
அடியாள் துணையிருக்க,
அச்சடித்த பச்சைத்தாள்
மடிக்குள்ளே வேண்டுமட்டும்
மலிந்திருக்க, தொண்டரடிப்
பொடியாராய்ச் சோற்றுக்குப்
புகழ்பாடும் பேர்வழிகள்
கொடிதாங்கிச் சுற்றிவந்து
கொக்கரிக்க, 'காசுதனைப்
பிடிதம்பீ!' எனப்பசப்பிப்
பேரங்கள் பேசுவதும்,

மாச்சரிய மான இனம்
மதம் ஜாதி எனும்வெறியைக்
கூச்சம் சிறிதின்றிக்
குத்திக் கிளறிவிட்டு
வீச்சரிவாள் போலதனை
விளையாடச் செய்வதுவும்,
ஆன இவையொத்த—
காட்சிகளை இந்நாளில்
கண்டறியும் அனுபவத்தால்
ஆட்சிக் கலையென்றால்,
அரசியலே என்றக்கால்,
சூழ்ச்சியுண்டோ? என்றுளத்தில்
சூட்சுமமாய் ஓரெண்ணம்
தோன்றுவதும் வியப்பாமோ?

3

ஆதலினால்—
கம்பத் திருநாடா!
கைகொடுக்க வேண்டுமையா!
அம்பலத்தில் ஏறிவிட்ட
அம்பலத்தான் என்றனுக்குச்
சம்பவித்த சங்கடத்தைச்
சடுதியிலே தீருமையா!
அரசியலைத் தானறிந்த
அறிஞரெனில் நீரிங்கே
துரிதமாய் வந்தெனக்குத்
துணைநிற்க வேண்டுமையா!
என்றே நான்—
இருகையும் தானெடுத்தே
இறைஞ்சினேன்; இறைஞ்சிடவும்

வருகை புரிந்தெனக்கு
வழிகாட்டும் கம்பனவன்
திருவாய் மலர்ந்துபல
செய்தியெலாம் தானுரைத்தான்.
அறிஞனவன் என்னிடத்தே
அறைந்ததையே கூறுகின்றேன்:

4

“கவிராயா! நீ என்றன்
கருத்தினையா வேண்டுகின்றாய்?
செவிசாய்த்து நானுனக்குச்
செப்புவதைக் கேளப்பா!
புவியிதனில் மங்காத
புகழ்வாய்ந்து சிறப்புற்ற
கவியான போதிலுமென்
காலத்தில் என்னுளத்தே
தவியாய்த் தவித்தபல
தாகமெலாம் அறிவாயோ?
அந்நாளில்—
மன்னவன்றன் சபையினிலே
வண்தமிழிற் கவிபாடும்
என்னொத்தார் பலரிருந்தார்
என்றாலும், நானொரு நாள்
‘மன்னவனும் நீதானோ?
வளநாடும் உனதேயோ?
உன்னையறிந் தோ தமிழை
ஓதினேன்?’ எனக் கேட்டே

அன்னவன்றன் கொலுவதனை
அக்கணமே விட்டகன்றேன்.
பின்னர் சடையப்பப்
பிரபுவின்நல் லாதரவில்
சின்னுளேக் கழித்தாங்கே
செந்தமிழைப் பாடிவந்தேன்;
பின்னுளில் நானவரைப்
பிரிந்தேகி, எனைப்பயந்த
பொன்னுன தமிழ்நாட்டுப்
பூமியெலாம் சுற்றிவந்தேன்;
இந்நாட்டுக் குடிமக்கள்
இயல்பையெலாம் கண்டறிந்தேன்;
நாட்டரசன் கோட்டைவரை
நடந்தேன்; நடந்தலுத்து
வீட்டுப் பெரும்பதவி
மேவினேன்.

அந்நாளில்

நாட்டுமக்கள் துயர்பலவும்
நன்ருகக் கண்டறிந்தேன்.
வாட்டும் வறுமையிலே
வாடித் தளர்ந்திருந்த
பாட்டாளி மக்களையும்
பார்த்தேன்; துயர்கொண்டேன்.
வேல்வேந்தர் வாழ்வெல்லாம்
விவசாயத் தொழில்புரியும்
சால்வேந்தர் கைபார்த்தும்
சாதனையை எதிர்பார்த்தும்
கால்பாவி நிற்குமொரு
காரியம்தான் என்பதையும்

ஆல்போலே விழுதோட
அகத்துள்ளே கண்டறிந்தேன்.

அதனால்தான்—
மேழி பிடிப்பவர்க்கு
விவசாயம் செய்பவர்க்கு
வாழியரோ வாழியென்று
வாயார வாழ்த்துரைத்தேன்.
காக்கின்ற கரமெல்லாம்
காராளர் கையென்றே
பாக்கள் பலபாடிப்
பரவசமும் உற்றேன்நான்.
என்றாலும்—
மன்னவர்தம் ஆட்சிக்கு
மாறாக, அந்நாளில்
பின்னோர் அரசியலைப்
பேசுதற்கும் ஏலாத
அந்நிலையில், என்னுளத்தின்
அடித்தலத்தில் பலநாளாய்
முன்னித் தவித்துள்ளே
மூண்டெழுந்த கற்பனையைக்
கன்னித் தமிழ்நாட்டில்
காணுமொரு வேட்கையுடன்
என்னுடைய காவியத்தில்
ஏற்றிவைத்துச் சென்றிட்டேன்.

5

''என்றனுக்கு முன்நமது
இனிய தமிழ்நாட்டில்

தென்றலெனத் தீங்கவிதை
செய்தளித்த வல்லவரில்
'நெல்லும் உயிரன்றே!
நீரும் உயிரன்றே!
மன்னன் உயிர்த்தேஇம்
மலர்கலை யல'கென்று
சங்கத் தமிழ்க்கவிஞர்
சாற்றியதும் நீயறிவாய்.
அங்கவர்க்குப் பின்வந்த
ஆழ்வாரும் அடியாரும்,
'திருவுடை மன்னவர்தம்
தெரிசனமே கண்டக்கால்
கருவளித்து நமைப்புரக்கும்
கடவுளையே கண்டிடலாம்'
என்றெல்லாம் பாட்டியற்றி
ஏகிவிட்டார்! இத்தகையோர்
ஒன்றிரண்டு பேரல்ல
என்பதையும் உலகறியும்.
இவ்வாறுய்—
ஏரைப் பிடித்துழுது,
எருவிட்டு, வித்தூன்றி,
நீரைக் கால்பாய்ச்சி,
நெல்லைப் பயிராக்கிப்
பாரைப் புரந்தருளிப்
பசிப்பிணியைப் போக்குகின்ற
கூட்டத்தை, மக்களெனும்
கோடிக்கால் பூதத்தை,
நாட்டின் நல்லுயிரின்
நாடியெனத் திகழ்வாரை

உடம்பென்றும், மன்னவனே
உயிரென்றும் உண்மையினைத்
தடம்புரட்டிக் காட்டிவிட்டுத்
தப்பித்துக் கொண்டுவிட்டார்!

ஆயினும் நான்—
படம்போட்ட கோசலத்தில்
பாராளும் மன்னவர்க்கும்
இடம்போட்டு வைத்திட்டேன்
என்றாலும், அந்நாட்டை
ஆண்டவனும் தசரதனை
அனைத்துயிரும் தாங்குமொரு
கூண்டாகவே யங்குக்
குறிப்பிட்டேன். அத்துடனே
வையகமே மன்னுயிராய்,
வையகத்தின் உயிர்க்குலத்தை
உய்யத் தாங்குகின்ற
உடலேதான் மன்னனென்றும்
ஐயததுக கிடமின்றி
அழுத்தமாய்க் கூறிவிட்டேன்.

6

''வையகத்து மன்னவரும்
வறிஞன் ஓம்புமொரு
செய்யெனவே நாடுதனைச்
சிரத்தையுடன் காப்பதுவே
மெய்யரசாம் என்பதையும்
விளக்கிப் பொருளுரைத்தேன்.
இருள்கடிந்து, உலகின்னரை
இன்புறுத்தி, தண்ணொளியாம்

அருள்பரப்பும் வெண்மதிபோல்,
ஆள்பவர்தம் குடைநிழலும்
மருள்கடிந்து மக்களது
மனத்தினிலே ஒளிபரப்பும்
பொருளாக வேண்டுமென்றும்
புகன்றிட்டேன்.

மன்னவர்கள்
இனிய மொழிபேசல்,
ஈகைக் குணம்படைத்தல்,
வினையியற்றித் தூய்மையுடன்
விழுமியநல் வெற்றிபெறல்,
நினையுமொழி நீதிநெறி
நின்றிடுதல் என்பவற்றைக்
கனவினிலும் மறவாது
கடமைதனை ஆற்றிவிட்டால்
அழிவில்லை! அன்னவர்க்கோர்
ஆபத்தும் இல்லையென்றேன்!
ஆரோடும் பகைக்காத
அமைதியினைக் கைக்கொண்டால்
போரொடுங்கு மல்லாது
புகழொடுங்க மட்டாது!
வேரோடு கெட்டழியும்
வினைவந்து மூளாது!
பாராளும் மன்னவர்க்கும்
பழிவந்து சூழாது!
என்றெல்லாம்—
நேருறவே நானவர்க்கு
நெறிமுறையைக் கூறிவிட்டேன்.

7

"தேவரிலும் மூவரிலும்
தேர்ந்த பெருவலிமை
மேவியவர் என்றாலும்,
மேதினியில் மன்னவர்கள்
நல்லமைச்சர் சொல்வழியே
நடப்பதுவே நல்லதென்றும்
சொல்லிவைத்துப் போய்விட்டேன்.

மந்திரிமார் என்றுசொன்னால்
மக்கள்தமை ஏமாற்றும்
தந்திரிமார் எனவுரைக்கும்
தன்மையிலே செல்லாமல்,
வட்டிக்கு வட்டிபெறும்
மார்வாரிக் கூட்டம்போல்
திட்டமெனும் பேராலே
தேசத்து மக்களின்மேல்
வரிமேல் வரிபோட்டு
வல்லுயிரை வாங்காமல்,
உரியாய் உரித்தவரை
உள்ளியென ஆக்காமல்,
உற்றதையும் தானறிந்து
உறுபொருளும் ஆங்குணரக்
கற்றவராய், தமதாட்சிக்
காலத்திற் செய்தவினைக்
குற்றமொன்று தீமையுருக்
கொண்டெழுந்து வந்திடினும்
மற்றதனைத் தெரிந்தாங்கே
மாற்றுகின்ற பெற்றியராய்,

செம்மையிலே திறம்பாத
தேற்றத்தில் நிற்பவராய்,
மும்மையெலாம் கண்டறிந்து
முன்மொழியும் வல்லவராய்,
உள்ளவரே நல்லமைச்சுக்
குரியவராம் என்றும்நான்
தெள்ளு தமிழ்மொழியில்
தெளிந்துரைத்துச் சென்றுவிட்டேன்.

8

''இவ்வாறாய்—

மன்னர் தமைக்குறித்தும்
மந்திரிமார் தரங்குறித்தும்
என்னுளத்தி லேயெழுந்த
எத்தனையோ சிந்தனையைப்
பின்னிப் பிணைத்தெனது
பெருங்கதையில் பேசிவிட்டேன்.

காவியத்துக் கானகதைக்
கட்டுக்கோப் பைப்புரிந்து
பாவியற்றும் காரணத்தால்,
பாராளும் மன்னவர்தம்
ஓவியத்தை இவ்வாறாய்
உருச்செய்தேன் என்றாலும்,
மேவியென துள்ளத்தே
மேலோங்கி நின்றுவந்த
ஆவலையும், நாட்டுமக்கள்
அனைவருக்கும் நல்வாழ்வைப்

பாவிக்கும் அரசியலைப்
பற்றியஎன் கொள்கையையும்
கோவிலென நான்படைத்த
கோசலத்தில் தான்குறித்தேன்.
உண்ணுவதோ நாளுக்கோர்
உழக்குத்தான் என்றாலும்
கண்ணெட்டும் தொலைவரையில்
காடும், கழனிகளும்,
பண்ணை வயல்வெளியும்,
பச்சைப் பசும்பரப்பும்,
எண்ணுதற்கும் ஏலாத
ஏக்கர் நிலப்பரப்பும்,
மண்ணுரிமை யாய்க்கொண்டு
வாழும் நிலக்கிழவர்,
பண்ணை வெளிகளிலே
பாடுபடு வார்வயிற்றில்
மண்ணை யடித்தவர்தம்
வாழ்வையெலாம் தீராத
புண்ணாக்கி, வெங்கொடுமை
புரிந்தாலும், அவரெல்லாம்
கொடையாளி கர்ணனென்றும்
குமணன், பாரியென்றும்
நடைபோட்டு வந்ததையும்
நான்கண்டேன்; நாட்டிலுள்ள
படைசனங்கள் துன்பினையும்
பலவாறு கண்டறிந்தேன்.
இவ்வாறாய்—
உடையாராய், இல்லாராய்
உலகத்து மக்களினம்

உடைபட்டு இருவேருய்
உருக்குலைந்து வாழ்கின்ற
இடைவெளியைத் தான்நிரப்ப
என்மனத்தில் எண்ணிவிட்டேன்.
எனவேதான்—
இல்லாரும் உடையாரும்
இல்லாத கோசலத்தை,
எல்லாரும் எல்லாமும்
எய்துமொரு பொன்னுட்டை,
கள்வாரும், செல்வத்தைக்
காப்பாரும் இல்லாத,
கொள்வாரும், கைநீட்டிக்
கொடுப்பாரும் இல்லாத,
நல்லதொரு சமுதாய
நாட்டத்தில் மனங்கொண்டேன்.

9

''வல்லடியாய் எனையிங்கு
வரவழைத்த கவிராயா!
சொல்லுகின்ற வார்த்தையினைச்
சுருக்காகக் கேட்டுகொள்!
தொல்லுலகில் என்காலச்
சூழ்நிலைகள் இந்நாளில்
இல்லை! இன்றை உலகியலில்
எத்தனையோ மாற்றங்கள்!
ஆதலினுல்—
சொல்லறிந்து, தமிழ்க்கவிதைச்
சுவையறிந்து, நானுரைத்த

நல்லுலகை, கோசலமாம்
நற்கனவை நனவாக்க
அல்லும் பகலும்நீர்
அயராது பாடுபட்டால்,
எல்லோரும் முயன்றதனை
ஏற்று நடத்திவிட்டால்,
பல்லாண்டுக் கால மனப்
பாரமெல்லாம் தீர்ந்துமக்கு
நல்லாசி கூறிடுவேன்;
நாளும் துணைபுரிவேன்.''

## 10

என்றே பதிலளித்தே
ஏகிவிட்டான் நம் கம்பன்!
மன்றோரே! நற்கவிதை
வாசகத்தால், கற்பனையால்
அன்றவனும் கண்டறிந்த
அரசியலின் சூட்சுமத்தை
இன்றுங்கள் முன்னாலே
இயம்பிப் பணிமுடித்துச்
சென்று வருகின்றேன்;
சபையோரே! சேவித்தேன்.

1961

# 11

# பாரதி: 'பிணிதீர்க்கும் மருத்துவன்'

1

பாட்டுக் கொருபுலவன்
பாரதிக்கு விழாவெடுத்துக்
கூட்டுங் கவியரங்கில்
கூடிநிற்கும் பாவலரே!
கூடிநிற்கும் பாவலர்கள்
கூறும் கவிதைகளை
நாடிவந்து கேட்டருளும்
நல்லவரே!

உமையெல்லாம்
கூடிஇரு கையெடுத்துக்
கும்பிட்டே, என்னுளத்தில்
ஓடிக் குறுகுறுத்தே
உருவான தோர் கருத்தைப்
பாடற் பொருளாக்கிப்
பாடுகின்றேன். இனிக்கேண்மின்!

2

இன்றைக்குச் சற்றேற
இருமாதம் முன்னிருக்கும்;

என்றைக்கோ?...நினைவில்லை
அன்றைக்கு—
பாட்டுக் கொரு புலவன்
பாரதியைப் பெற்றளித்த
நாட்டுக்கு, தென்னிளசை
நகருக்குச் சென்றிருந்தேன்.

அந்நகரின்—
கன்னங் கரியநிறக்
கானக் கரிசலிலே,
வன்னக் கருநீல
வாவியிலே நீந்துகின்ற
அன்னம் சிறைவிரித்த
அழகென்ன, வெள்ளியதாய்
நின்றிலங்கும் பாரதியார்
நினைவுமணி மண்டபத்தின்
முன்றிலிலே சென்றமர்ந்து
மோனத் தமைதியிலே
ஒன்றிநின்று சிந்தனையை
உலவித் திரியவிட்டேன்.

3

சிந்தித் திருந்திட்ட
சிறுபோதில் என்னுளத்தே
உந்தி எழுந்ததுகாண்
ஒரெண்ணம்:
"பாரதியை ஈன்றளிக்கும்
பாக்கியத்தைப் பெற்ற இந்த

ஊரகத்தே பாரதியார்
உதிப்பதற்கு முன்பேயே
பேரும் பெரும்புகழும்
பெற்றிருந்த பாவலர்கள்
ஓரிருவர் அல்ல; பலர்
உதித்து மறைந்ததுண்டு.
என்றாலும்—
அன்னவர்தம் கூட்டத்தில்
ஆரே ஒருவருக்கும்
சின்னமொன்றை இந்நகரில்
செய்து நிறுத்துதற்கே
இன்னமும் நாம் எண்ணினமோ?
இல்லையில்லை!

மாறுகப்
பின்னவனும் பாரதிக்குப்
பெரியதொரு மண்டபத்தை
உன்னதமாய் நாம்நிறுவி
உள்ளம் களித்ததற்கு
என்னபொருள், என்னபொருள்?''
என்றெழுந்த தோர்எண்ணம்.

''இந்நகரி லேபிறந்து
இந்நகரி லேவளர்ந்து
இந்நகரில் தமிழ்க்கவிதை
ஏராள மாயியற்றி
இந்நகர மண்ணகத்தே
இறந்து மறைந்துவிட்ட
எண்ணற்ற தமிழ்ப்புலவர்
எவருக்கும் சின்னமில்லை!
இந்நிலையில்—
இந்நகரி லேபிறந்தும்
இந்நகரில் வாழாது

சென்னையிலும் பாண்டியிலும்
சென்றிருந்து வாழ்ந்த கவி
மன்னனுக்கு மட்டுமிங்கு
மண்டபம்நாம் கண்டதற்கு
என்னபொருள், என்னபொருள்?''
என்றெழுந்த தோர்எண்ணம்.

4

என்னபொருள் என்னபொருள்
என்றெழுந்தே அலைமோதிப்
பன்னுகின்ற கேள்விகட்குப்
பதில்காண ஏலாது
பின்னமுற்று, உள்ளத்தே
பித்துற்று நான்மயங்கும்
அந்நிலையில்—
வெய்ய பசிக்கொடுமை
வேளையிலே, நல்லுணவைக்
கையதிலே தந்தருளும்
கருணைபோல், காரிருட்டில்
துய்ய வெளிச் சோதியொன்று
துணைவந்து சேர்ந்தாற்போல்,
''இன்னபொருள் கவிராயா!
இன்னபொருள்!'' என்றொலிக்கும்
சின்னக் குரல் கேட்டேன்;
சிலிர்த்தேன்; விழிப்புற்றேன்.
அந்நேரம்—
கண்ணெதிரே உன்னதமாய்க்
காட்சிதந்து நின்றிலங்கும்

வண்ணமணி மண்டபமே
வாய்திறந்து பேசிற்று:

5

"மண்டபமேன் பாரதிக்கு
மட்டும்?என்ற சிந்தனையால்
கண்டபடி எண்ணியுளம்
கலங்குகின்ற கவிராயா!

மண்டபமாய் நிற்குமென்றன்
மருமத்தைச் சொல்லுகிறேன்.
பண்டுதொட்டே இந்நகரம்
பற்பலராம் பாவலரைக்
கண்டதுதான்; அன்னவர்தம்
கவிதைச் சுவைபலவும்
விண்டுரைக்கக் கேட்டுள்ளம்
வியந்ததுதான்.

என்றாலும்

அன்னவர்கள் தம்கவியை
ஆக்கிப் படைத்ததெலாம்
இந்நகரை ஆண்டுவந்த
எட்டப்ப ராசனென்னும்
மன்னர் பரம்பரைக்கா?
மக்களுக்கா? என்பதனைச்
சின்னேரம் நீ மனத்தே
சித்தித்துப் பாரப்பா!

6

"அவரெல்லாம்—
நாட்டுமக்கள் தம்நிலையை
நலத்தையெண்ணிப் பாராமல்,

வீட்டுச் செலவினுக்கும்,
வெண்சோற்றுக் குப்புக்கும்,
போட்டு மினுக்கவொரு
புட்டா ஜரிகையிட்ட
வேட்டிக்கும், ஆஸ்தான
விருதுக்கு மாய்த்தங்கள்
பாட்டை, பைந்தமிழைப்
பாராளும் மன்னனுக்கே
நோட்டெழுதிப் போட்டதுபோல்
நோற்றூர்! அடகுவைத்தார்!

நந்தமிழாம் செந்தமிழின்
நயத்தை, தேன்சுவையை,
எந்தவொரு கருத்தினையும்
எடுத்துரைக்கும் ஆற்றலினை,
சந்த லயத்தழகின்
சக்தியினைத் தம்முடைய
விந்தைப் புலமைக்கோர்
விளையாட்டுப் பொருளாக்கி,
பந்தனமும், பற்பலவாம்
பங்கிகளும், கேட்பவர்தம்
சிந்தை தனைமிரட்டும்
சிலேடை திரிபுகளும்
மடக்கும் வரப்பாடி
வண்டமிழைச் சீர்குலைத்து
முடக்குவலி வாதத்தில்
முடக்கிக் கிடத்திவிட்டார்!

இத்தனைக்கும் மேல்அவர்தம்
இனிய தமிழறிவை,

அத்துபடி யாகிவிட்ட
அணியாப் பிலக்கணத்தை,
விற்பன்ன மேதைநிறை
வித்துவத்தை, அழகார்ந்த
கற்பனையை, உவமானம்
காட்டுகின்ற திறமையெனும்
அற்புதத்தை யெல்லாம்தம்
அரசன் தனைப்புகழ்ந்து,
சலாமிட்டு, குலாமிட்டு,
சந்ததமும் அவன்மீது
உலாவென்றும், மடலென்றும்,
ஒருதுறைப்பா இனமென்றும்
காமரச மஞ்சரியாய்க்
கவிதை பலபாடிக்
களிப்பதற்கும்,
வாம மகளிரெல்லாம்
வாட்டுகின்ற விரகத்தால்
ஏமமென்றும் சாமமென்றும்
ஏங்கித் தவிதவித்துக்
கோமகனும் மன்னனையே
கூடத் தவிப்பரென்றும்,
மாமன் மகனெனவே
மன்னவனும் அன்னவர்தம்
சேம நலங்கருதிச்
சித்தம் இரங்கியருள்
பாலிப்பான் என்றுகதை
பண்ணுதற்கும், மன்னனுக்கு
லாலியோ லாலியென்று
நட்டுவங்கள் செய்வதற்கும்,

வெங்காம வேட்கையினுல்
வெந்துருகும் மன்னனவன்
கொங்கலரும் பூமுடித்த
கோதையர்கள் பலரோடும்
கங்குல்பகல் மன்மதனுர்
கலைபழகி நிலைதளரும்
சங்கதிக்காய், தம்கவிதா
சக்தியினை, செந்தமிழைத்
தங்கபஸ்ப மாத்திரையாய்,
தாதுபுஷ்டி லேகியமாய்ப்
பொங்கலிட்டார்! தம்கவியைப்
புலைப்பொருளா யாக்கிவிட்டார்!

7

"'இவ்வாருய்—
மன்னனையே தம்வாழ்வில்
மதித்துக் கவிபாடித்
தன்னலத்தைக் காத்துவந்த
தன்மையினுல், நாடெங்கும்
பரந்து கிடந்துழலும்
பாரதத்து மக்கள்தமை
மறந்துவிட்ட காரணத்தால்,
மக்களுமே அன்னவரை
மறந்துவிட்டார் என்னுமொரு
மருமம்தான் நானிங்கே
பிறந்து சிறந்திருக்கும்
பேருண்மை ஆகுமப்பா!
ஆதலினுல்—
பாரதிக்கேன் சின்னம்? எனில்
இன்னபிற பாவலர்க்கு

நேரெதிராய் அவன்மக்கள்
நினைவொன்றே தன்வாழ்வின்
ஆருயிராய், லட்சியமாய்
அறிவு படைததவன் செய்
காரியமாய்க கொண்டவொரு
காரணம்தான்!...

## 8

''பாரதி—யார்?...
கடல்கடந்து வந்தவெள்ளைக்
காரரவர் சூழ்ச்சியினால்
அடலிழந்து, சுதந்திரத்தின்
அருமை தனையிழந்து,
உள்ளம் குமைந்தடங்கி,
உணர்ச்சியெலாம் மரமரத்து,
பள்ளத்தே கிடந்துழன்ற
பாரதத்து மக்களது
தூசடைந்த உள்ளத்தைத்
துடைத்து விளக்கேற்றி,
தேசபக்தி எனும்வடவைத்
தீயை அகத்தேற்றி,
நாடி நரம்புகளில்
நல்லரத்தம் கால்பாய்ச்சி
பேடித் தனம்தப்பிப்
பிழைத்தோம் எனவிரைந்தே
ஓடி மறைந்தொழிய
உணர்வை முறுக்கேற்றி,
நாட்டின் விடுதலையை
நாட்டுமொரு நற்பணிக்காய்

வீட்டை, சுற்றத்தை,
வேலை தனைத்துறந்து,
துப்பாக்கிக் குண்டுக்கும்,
தூக்குக் கயிற்றுக்கும்,
செப்பரிய வெங்கொடுமைச்
சிறைவாசச் சிறுமைக்கும்,
தம்மையே ஆகுதியாய்த்
தந்தருள், பாரதத்தில்
செம்மை அறவேள்வி
செய்வித்து வாழ்ந்திடுமோர்
ஒப்பரிய நற்போரில்
உதவும் படைக்கலமாய்
செப்பரிய பலகவிதை
செய்தளித்த கவிஞர்குலச்
செம்மல்எங்கள் பாரதியார்!

9

''கொச்சிமஞ்சள் பூச்சோடும்
குங்குமத்துப் பொட்டோடும்
பிச்சிச் சரம்புனைந்த
பின்னல் எழிலோடும்
இச்சைக் கினிப்பூட்டி
இளம்போதைச் சுகமூட்டும்
கச்சழகுத் திருமேனிக்
கட்டழகின் குழைவோடும்
விரித்த இதழ்க்கடையில்
விளையாடும் நகையோடும்
சிரித்த முகத்தோடும்
சீதேவிக் களையோடும்

மாற்றுப்பொன் தங்கத்தால்
வார்த்தெடுத்த சிற்பமெனத்
தோற்றும் மனையாட்டி
துணையாய் அருகிருக்க,
நேற்றுப் பிறந்தபயல்
நெஞ்சில் நமைஉதைக்க
ஊற்றுச் சுரந்தோடி
ஓடுகின்ற வாயெச்சில்
தூற்றலினை நம்மீது
தூவானம் போலுமிழ,
வீற்றிருந்தே அனுபவிக்கும்
வீட்டின் சுகவாழ்வைப்
போற்றி மதிக்காமல்
பொய்யென்றும் மானிடரைச்
சோற்றுத் துருத்தியென்றும்,
சொத்தைச் சடலமென்றும்,
காற்றென்றும், மாமாயக்
கறுப்பென்றும், கனவென்றும்,
தூற்றிவந்த மாமாயைச்
சூதைக் கருவறுத்து.
'மாயை உலகமென்று
மயங்காதே! நற்கருணை
பாயும் ஒளிவிழியில்,
பாசம் பொழிந்து வரும்
தாயும், இதழமுதம்
தந்தருளும் மனையாளும்,
சேயும் அதன் மழலைச்
செல்லச் சிரிப்பழகும்

மாயைக் கறுப்பல்ல;
மாமாயம் தானல்ல;
பேயல்ல; பிசாசல்ல;
பீடையுமே அல்ல!' எனும்
தூய மணி மந்திரத்தை,
சூத்திரத்தை வகுத்துரைத்தும்,

'செத்தொழிந்த பின்னரொரு
சிவலோகம் வைகுந்தம்
சத்தியமாய் இல்லையடா!
சாயுச்யம் மோட்சமென்றும்
முத்தியென்றும் சொல்வதெலாம்
முழுமையுற நம் வாழ்வை
இத்தரையில் தோற்றுவிக்கும்
இலட்சியமே!' என்னுமொரு
புத்தி தனைப் புகன்றும்,

பாமரராய், விலங்கினமாய்,
பார்வையற்ற அந்தகராய்,
ஊமையராய்க் கிடந்துழலும்
உலகத்துப் படைசனங்கள்
சேம முற்று வாழ்க்கையிலே
சிறந்தோங்க வேண்டுமெனில்,

அன்னவர்க்கு—
நாமங்கள் சாத்துகின்ற
நரிக்குணத்துத் தந்திரத்தால்
மாமாயக் கள்ளர் சிலர்
வகுத்துரைத்த நீதிகளை,
பாத்தி கட்டி, நீர் பாய்ச்சிப்
பயிர் விளைக்கும் பஞ்சை மகன்

சூத்திரனும், வெறுந்தண்டச்
சோறுண்ணும் பேர்வழியோ
கோத்திரத்தால் பூசுரனும்
என்றெல்லாம் கூறுகின்ற
சாத்திரத்துக் குப்பைகளை,

சாதி சமயமென்றும்,
தாழ்வு, உயர்ச்சி யென்றும்
பேதித்து மக்கள் தமைப்
பிரித்தாளச் சூழ்ச்சி செயும்
பாதகத்தை, மனமறிந்த
பாவத்தின் பேயுரையை
மோதி மிதித்துடற்றி
மூட்டோடு பேர்ப்பதுவே
நீதியென்றும் நெறியென்றும்
நியாயமென்றும் கண்டுரைத்தும்
ஈதொத்த—
கோதகன்ற தத்துவத்தால்,
கொள்கையினல், பாரதத்துத்
தீதனைத்தும் போக்குதற்காய்த்
தீர்க்கமுடன் திட்டமிட்ட
போதகன்தான் எங்களது
புகழ்க்கவிஞன் பாரதியார்!

## 10

''வையகத்தே மக்கள் பலர்
வறுமைக் கொடுமையினல்
பொய்யாய், பழங்கதையாய்,
புதைபொருளாய் ஒடுங்குற்ற

வெய்ய பசி வயிற்றோடும்,
வேகின்ற நெஞ்சோடும்,
நொய்யரிசிக் கூழுக்கும்
நொம்பலங்கள் பட்டுழன்று
நோவதுவும்,
வேறு சிலர்
தொய்யாத பெருந் தொந்தித்
தொப்பையிலே நல்லுணவை
நையப் புடைத் தடைத்து
நடக்கத் திணறுவதும்,
நெய்யாற்றி லே மிதந்து
நீச்சல் அடிப்பதுவும்
ஆனதொரு புன்மை யெலாம்
அழிந்து பட, மக்களெலாம்
வானவராய், தெய்வதமாய்
வளர்ந்தோங்க, வையகத்தே
கூனல் மதியுடையோர்
கோத்து வைத்த சட்டமெலாம்
வேனலிலே மெழுகிட்ட
விதமாய்க் கரைந்தோட,
மானிடர்கள் யாவருமே
வகை வகையாய்த் தொழிலியற்றி
மேன்லத்தை எய்தி நிலை
மேலோங்க, உலகெங்கும்
இல்லை யெனும் புன்சொல்லை
இல் பொருளாய் ஆக்கிவிட,
நல்லதொரு சமுதாயம்
நானிலத் தே மலர,
எல்லோரும் ஓரினமாய்
இனிதிருக்க வேண்டுமென்று

சொல்லாலும் கருத்தாலும்
சொல்லி வைத்த தமிழ்க்கவிதை
வல்லாளனே நந்தம்
வரகவிஞன் பாரதியார்!
ஆதலினால்—
பாரதத்து மக்களது
பல்வேறு நோய்களையும்
வேரதிரக் களைந்தெறியும்
வேட்கையினால் பாரதத்தின்
நாடித் துடிப்பை, ரத்த
நாளத்தைத் தொட்டறிந்து,
ஊடுருவி, உள்ளுருவி,
உயிருருவும் பிணிபலவும்
தேடி அறிந்தவற்றைத்
தீர்க்கும் மருந்தறிந்து
பாடிவைத்த மெய்ஞ்ஞான
பண்டிதனே பாரதியார்!''

## 11

இவ்வாறாய்—
கண்ணெதிரே உன்னதமாய்க்
காட்சி தந்த மண்டபத்தின்
வண்ண மணி வாசகத்தை,
வாழ்க்கை ரகசியத்தை,
நாட்டு மக்கள் தமை வாட்டும்
நலிவை, பல பிணியை
ஓட்டுவித்து, அன்னவர்க்கு
உணர்வூட்டி, பாரதத்தை

மீட்டுவிக்கப் பாடி நின்ற
மேதைக் கோர் மண்டபத்தை
நாட்டுவித்த தமிழ் மக்கள்
நன்றி யறிவுதனைக்
கேட்டேன்; களி கொண்டேன்;
கேள்விக்கும் விடை கண்டேன்!

12

நாட்டுக் கொரு புலவன்
பாரதிக்கு விழாவெடுத்துக்
கூட்டுங் கவியரங்கில்
கூடிநிற்கும் நல்லவரே!
மீட்டுமுறை நான் வணங்கி
மீள்கின்றேன்; விடைகொண்டேன்.

1957

# 12

## பாரதி—யார்?—தோழன்!

இந்துமத அபிமான சங்கம் தன்னை
   இனியதமிழ்ப் பாக்களினால் வாழ்த்திச் சென்ற
செந்தமிழர் தவப்பயனும், சொல்லின் செல்வச்
   சீராளன் பாரதி-யார் என்றே கேட்கும்
இந்தவொரு கவியரங்கின் தலைவ! மற்றும்
   என்னருமைத் தமிழன்பீர்! வணக்கம். என்றன்
சிந்தைகவர் பாரதியைத் தோழன் என்றே
   செப்புகின்றேன்: ஆம். அதனைச்சிறிதே
                                        கேட்பீர்! 1

தோழனென்ற சொல்கேட்டுத் துடிப்போர் உண்டு;
   துடைநடுங்கிக் கிடுகிடுக்கும் சூரர் உண்டு;
பேழையிலே உள்ளபணம் பறிக்க வந்த
   பேயென்றும் அஞ்சிடுவார் உண்டு; தம்மைப்
பாழடிக்க வந்தவொரு காலன் என்றே
   பயமடித்துக் கிடப்பாரும் உண்டு; ஆனால்
வாழவைக்கும் மந்திரச்சொல் தோழன் என்றே
   வாழ்க்கையிலே கண்டறிந்தார் தாமும்
                                        உண்டால்! 2

வேழமெநடும் படைகண்டும் விலகிப் போகேன்!
   வில்வளைப்பேன்! போர்விளைப்பேன்! வீரர்
                                        தம்மை

ஆழநெடும் திரைகடக்க ஓட்டேன்! என்றே
ஆர்த்தெழுந்த குகப்பெருமான் அகத்தில்
இந்தத்
தோழனென்ற சிறுசொல்லே தெய்வச் சொல்லாய்த்
தோற்றியதும் அறியோமோ? புதுமைத்
தாமோ?
தோழனெனில் பாரதிபின் யார்க்குத் தோழன்?
தோழனிலை யெனிலவனும் எவர்க்கே
காலன்? 3

பசித்துயரால் தம்முகமே வாடும் போதும்
பயிர் முகத்தை வாடவிடாப் பான்மை யாலே
பொசித்துவிடும் வெப்பத்தும், நெற்றி வேர்வைப்
புனல்உகுத்து, அனல்குறைக்கும் உழவர் நித்தம்
நசித்துவரும் புன்மைதனைப் போக்கி, நாட்டை
நலமுறுத்தப் பணிசெய்வார் தமக்கே தோழன்!
பசித்துயரை முதலாக்கிப் பணத்தைச் சேர்க்கும்
பாதகர்க்கோ பாரதியார் காலன்! காலன்! 4

பத்தரைப்பொன் மாற்றினிலே உருக்கி வார்த்த
படிவமென ஒளிர்கின்ற மனையாள் தன்னை,
புத்துருக்கு நெய்வார்த்துக் கொளுத்தி வைத்த
பொற்சுடர்போல் நின்றிலங்கி, பவள வாயில்
நித்திலங்கள் தனையுதிர்க்கும் பிள்ளைப் பேற்றை
நேசித்து வாழ்வதற்குக் கற்றூர் தோழன்!
இத்தரையில் பெண்டுபிள்ளை எல்லாம் மாயை
என்றுநமை ஏய்த்திடுவார் தமக்கோ—
காலன்! 5

தாயகத்தின் தளையறுத்தார், அடிமை வாழ்வைத்
தகர்த்தெறிந்தார், விடுதலைப்போர் புரியும்
வேள்வித்

தீயகத்தே தம்முயிரைத் திரணம் ஆக்கித்
தீக்குளித்தார், சிறைசென்றார், தூக்கு மேடை
வாயகத்தே நின்றிட்ட போதும், தங்கள்
வாயமைதனை இழக்காதார் தமக்குத் தோழன்!
நாயெனவே அன்னியர்தம் காலைச் சுற்றி
நச்சிவந்த பிச்சருக்கோ அவனோர் காலன்! 7

தேசத்தின் பரம்பரையை, தியாகம் தன்னால்
சேகரித்த செல்வத்தை, இதயம் தன்னில்
பூசிக்கும் தெய்வமெனப் போற்றும் ஞான
போதத்தை, இலட்சியத்தை, தருமம் தன்னைக்
காசுக்கு விலைபேசி வருவார் தம்முன்
கட்டுறுதி இழக்காதார் தமக்குத் தோழன்!
வீசம்கால் அரையென்றே மானம் தன்னை
விற்றுமுதல் ஆக்கிடுவார் தமக்கோ—காலன்! 8

ஒண்மைசேர் உள்ளத்தின் தோழன்! என்றும்
உருட்டுக்கும் புரட்டுக்கும் தோழன் அல்லன்!
திண்மைநிறை அறத்துக்கே தோழன்! என்றும்
திருட்டுக்கும் தீமைக்கும் தோழன் அல்லன்!
வண்மைக்கும் வாய்மைக்கும் தோழன்! என்றும்
வழக்காடிப் பொய்யுரைப்பார் தோழன்
அல்லன்!
உண்மைக்கே என்றென்றும் தோழன்! அதற்கு
ஊறிழைத்தால் அவன் பொல்லாக் காலன்!
காலன்!

1958

# 13

# பாரதி கண்ட தத்துவம்

1

புத்துலகச் சிற்பியெனப்
புகழ்படைத்த பாரதியின்
தத்துவத்தைப் பாடுதற்காய்த்
தாக்கீது விட்டழைத்தே
இத்தினத்தில் இவ்வரங்கில்
இழுத்துவிட்ட புண்ணியரே!
முத்தமிழின் துறைபலவின்
முறையறிந்து கவியிசைக்கும்
வித்தகரே! அவைத்தலைவ!
விழாக்காண வந்தவரே!

உமக்கெல்லாம்—
சிற்றம் பலத்தான் நான்
தெண்டனிட்டு, தமிழ்த்தாயின்
நற்றவமாய் வந்தகவி
நாயகன்தன் தத்துவத்தைப்
பற்றிச் சிலமொழிகள்
பகரத் தொடங்குகிறேன்.

2

"தத்துவமா? நமக்கந்தச்
சங்காத்தம் போதுமையா!

சத்தென்பீர்! சித்தென்பீர்!
சங்கரையர் கண்டறிந்த
அத்துவிதம் என்றிடுவீர்!
'அதுவேதான் நீ' என்பீர்!
'தத்வமஸி! தத்வமஸி!'
தாரகமந் திரமென்பீர்!
கத்திமுனை ஒத்ததெனும்
கடோப நிடமென்பீர்!
சித்தாந்தம் வேதாந்தம்
சிவஞானம் என்றிடுவீர்!
பத்தியென்பீர்! முத்தியென்பீர்!
பரமென்பீர்! இகமென்பீர்!
அத்தென்பீர்! இத்தென்பீர்!
அதுவுமிலா இதுவுமிலாத்
தத்துவம்காண்! என்றும்நீர்
சாற்றிடுவீர்!

இவ்வாறாய்
எத்தனையோ எடுத்துரைத்தே
எம்முயிரை வாங்கிடுவீர்!
அத்தனைக்கும் எளியோம்யாம்
ஆளல்ல! விட்டுவிடும்!
சத்தியமாய்ச் சொல்லுகிறோம்!
சாமீ! நமக்கிந்தத்
தத்துவமாம் தீராத
தலைவலியே வேண்டாம் காண்!

3

''மெத்தப் படித்தவர்கள்,
மேதாவி யானவர்கள்,

புத்தகங்களைக் குடித்துப்
புளியேப்பம் விட்டவர்கள்,
பெத்தப் பெரியவர்கள்,
பிரசங்கம் செய்பவர்கள்,
நித்தக் கவலைகட்கு
நெஞ்சிலிடம் இல்லார்கள்,
முத்திநெறி கண்டறிய
முற்றும் துறந்தவர்கள்,
பத்திநெறி என்றுசொலிப்
பண்டாரம் ஆனவர்கள்

இத்தகையோர்—
வித்துவத்தைக் காட்டுதற்கும்,
விளம்பரங்கள் தேடுதற்கும்,
வைத்துவிளை யாடுதற்கும்,
வாணிபங்கள் செய்வதற்கும்,
புத்தி தனைமயக்கிப்
புகழ்மாலை வாங்குதற்கும்,
எத்துசித்து வித்தைசெய்து
ஏய்த்துப் பிழைப்பதற்கும்,
ஒத்தூதி, சிங்கிதட்டி
உதவிப் பணிபுரியும்
தத்துவத்தை எம்மிடத்தே
சாற்றுவதால் பயனேது?

4

''அத்தக் கூலிக்கும்,
ஆழாக்கு அரிசிக்கும்,
பொத்தி உடல்மறைத்துப்
போர்த்தும் முழத்துணிக்கும்,

சித்தே தலைசாய்க்கும்
சிறுகூரை நிழலுக்கும்,
நத்தியெமைச் சார்ந்திங்கு
நம்பிநிற்கும் சீவருக்கும்,
நித்தப் படிதேடி
நெஞ்சுலர்ந்து, நேரமெலாம்
செத்துத் தினம் பிழைத்துச்
சீவிக்கும் எங்களுக்குத்
தத்துவமேன்? அஃதெங்கள்
சாண்வயிற்றுப் பசிதீர்த்து
வைத்திடுமோ?''—
என்றிங்கே
வந்திருக்கும் ஒருசிலபேர்
சித்தம் குறுகுறுக்கும்
செய்தியெலாம் நானறிவேன்!

5

மித்திரரே! உங்கள்மனம்
மேவிடுமிச் சிந்தனையில்
சத்துண்டு, பொருளுண்டு,
சாரமுண்டு என்பதனை
ஒத்துத்தான் கூறுகின்றேன்.
உலகியலில் தத்துவத்தைப்
பத்தடுக்கு மாடிகட்டிப்
பரண்மீது வைத்தவர்கள்,
வெத்து வெடிகிளப்பும்
விளையாட்டாய்ச் செய்தவர்கள்,
கொத்தவால் சாவடிக்குக்
கொண்டுவிலை சொன்னவர்கள்,

எத்திப் பிழைப்பதற்கோர்
இலக்கணமாய்ச் செய்தவர்கள்,
பத்தஞ்சு பார்ப்பதற்காய்ப்
பகடைக்காய் ஆக்கியவர்,
குத்துக் கொலைநடத்தக்
கோடாலி யாக்கியவர்,
கொத்தடிமை வாழ்வுக்கோர்
கூடாரம் ஆக்கியவர்,
பொத்திப் பொதிந்துவைத்துப்
பூட்டகமாய்ச் செய்தவர்கள்,
நத்திவந்த பேருக்கு
நாமத்தைப் போட்டவர்கள்,
சத்திரத்துச் சோற்றுக்குச்
சாசனமாய்ச் செய்தவர்கள்
எத்தனையோ பேருண்டு
என்பதெலாம் நாமறிவோம்.

6

என்றாலும்—
தத்துவமென் றேயுலகில்
சாற்றப்படும் பொருளின்
மெய்த்ததொரு நோக்கமென்
விளங்குவதும் யாதுகொலோ?
உலகை, உலகியலை,
உலகினில்வாழ் மக்களது
நிலையை, அந்நிலையின்
நியதி தனையறிந்து,
மானிடர்தம் புவிவாழ்வை
மாண்புபெறச் செய்வதற்காய்த்

தானியற்றும் ஆராய்ச்சி
தனிலறிந்து, தகைசான்ற
மேன்லத்தோர் உலகறிய
விண்டதுவே தத்துவமாம்!

7

ஆனாலும்—
கானலைநீர் எனநம்பிக்
கருத்தழிந்த கலைமானாய்,
தேனிருக்கப் பூத்தேடித்
திரிந்திட்ட தேனீயாய்,
தீயிருந்தும் விளக்கேற்றத்
தெரியாத பேர்வழியாய்,
சேய்ஒக்கல் தனிலிருக்கச்
சிந்தை கடன்கொடுத்துப்
போயலைந்து தேடிவந்த
புத்திகெட்ட ஒரு தாயாய்,
உழக்கிருக்கப் படிதேடி
உழன்றிட்ட பேதையராய்,
மழைக்குக் குடையிருந்தும்
வழிநெடுக நனைந்தவராய்,
மெய்யிருக்கப் பொய்யதனை
மெய்யென்று சொன்னவரும்,
கையிலுள்ள புண்காணக்
கண்ணாடி கேட்டவரும்,
கண்ணிருக்கக் காண்பவற்றைக்
காணவில்லை என்றாரும்,
மண்ணிருக்க அஃதுவெறும்
மனமயக்கம் என்றாரும்,

உள்ளதனை இல்லதென்றே
உருப்போட்டுச் சொன்னவரும்,
இல்லதனை உள்ளதென்றே
இலக்கணங்கள் செய்தவரும்,
தொல்லுலகில் பண்டுமுதல்
தோன்றிவந்த செய்தியெல்லாம்
எல்லோரும் நன்கறிவோம்!
என்றாலும், இச்சமயம்
இல்லைகொலோ, உண்டுகொலோ
என்றெல்லாம் வழக்காடும்
அல்லல்தனை மூட்டைகட்டி
அப்பாலே வைத்திடுவோம்!

8

நல்லது! இனி நமது கவி
நாயகனும் தன்கவியில்
சொல்லிவைத்த தத்துவத்தின்
சூட்சுமத்தைக் கண்டறிய
மெல்லப் புறப்படுவோம்.

பாரதி—யார்?
தாழ்வுற்று வறுமையினால்
தட்டழிந்து கெட்டழிந்து
பாழ்பட்டுக் கிடந்திட்ட
பாரதத்தை விழிப்பூட்டி
வாழ்விக்க வந்தவொரு
வைராக்யம் கொண்டவனாய்,
சூழ்கலியைக் கொன்றொழிக்கச்
சூளுரைத்து நின்றவனாய்,

ஏழை அடிமையென்றே
யாருமிலாப் பாரதத்தை
வாழையடி வாழையென
வாழ்விக்க வந்தவனாய்,
தருமம் அழிவெய்திச்
சத்தியமும் பொய்யாகும்
மருமத்தைக் கண்டறிந்து
மருந்துரைத்த பண்டிதனாய்,
முப்பத்துக் கோடிமக்கள்
முழுமைக்கும் புதுவாழ்வை
ஒப்பமிட்டுத் திட்டமிட்டு
உருவாக்கித் தந்தவனாய்,
அடிமை விலங்கதனை
அறுத்தெறிந்து, துயரூட்டும்
மிடிமைக் கொடும்பேயை
விரட்டவந்த வேப்பிலையாய்,
சாதிமதச் சழக்குகளை,
சாத்திரத்துப் பொய்மைகளை
ஊதிப் பறக்கடிக்கும்
ஊழிப் பெருங்காற்றாய்,
தாதரென்றும் சாமியென்றும்
சாத்திரங்கள் வகுத்துரைத்த
பேதத்தை முட்டோடு
பேர்த்தெறியும் அதிர்வேட்டாய்,
மேழி பிடிப்பவரும்
வேறுதொழில் செய்பவரும்
வாழியரோ வாழியென
வாக்குரைத்த பல்லாண்டாய்,
'இல்லையென்ற கொடுமைதனை
இல்லையென ஆக்குமொரு

வல்லமையை எனக்களிக்க
வழக்கோடி? வாய்திறந்து
சொல்வேண்டி சக்தி!' எனத்
துடிப்பாகக் கேட்டவனாய்,
பாட்டுத் திறத்தாலே
பாரையெலாம் பாலிக்கும்
தேட்டம் மனங்கொண்டு
செம்மாந்து நின்றவனாய்
வந்துதித்த நந்தமது
வரகவிஞன் பாரதியின்
சிந்தனையின், தத்துவத்தின்
சிறப்புக்கோர் வரம்புண்டோ?

9

கறைதுடைத்துப் புதுவாழ்வைக்
கணித்துரைத்த பாரதியும்,
இறைமையெனச் சொல்லுகின்ற
ஏகாந்தத் தனிநியதி
முறைமையுண்டு என்முன்னோர்
மொழிந்திட்ட தொருவழக்கில்
நிறைமனமும் கொண்டவொரு
நெறிமுறையில் நின்றவன்தான்.

என்றாலும், அவனந்த
இறைமைதனைப் பரவாழ்வில்
சென்றடைந்து, சாயுச்யம்
சித்திபெற வேண்டுமென்றே
என்றேனும் வேட்கையுற்று
ஏங்கிக் கிடந்தானா?

பொன்றியபின் வருமென்னும்
புதுவாழ்வுக் காய் உலகில்
இன்று களித்திருக்கும்
இவ்வாழ்வைப் பழித்தானு?
ஒன்றென்றும், பலவென்றும்,
உருவென்றும், அருவென்றும்,
அன்றின்று எனும்வரம்புள்
அடங்காத ஒன்றென்றும்,
நன்றென்றும் தீதென்றும்,
நானு விதம் பேசிச்
சென்றிட்ட முன்னேர்கள்
செப்பியபல் கூற்றையெலாம்
ஒன்றும் மறுத்துரையா
தொத்தூதி நின்ருனு?

## 10

அன்னவனே—
இரும்பு தனையுருக்கி
எந்திரங்கள் செய்வாராய்,
கரும்பு தனைப் பிழிந்து
கட்டிவெல்லம் செய்வாராய்,
அரும்பும் வேர்வையுகுத்
தாயிரமாம் தொழில்புரிந்து
வரும் புவனப் பாட்டாளி
வர்க்கத்தார் தம்மவர்க்கே
பெரும்புகழை இசைத்து, அவரே
பிரமனெனும் தெய்வமென்றும்
இரு விழியின் எதிர் காணும்
இறையென்றும் மனம்நிறைந்த

பெருமிதத் தோடுலகில்
பிரகடனம் செய்துவிட்டான்!

ஏரி, குளம் திருத்தி
எந்நாளும் பாடுபட்டு,
வாரியெனத் தானியத்தை
வழங்கிப் புவிபுரக்கும்
சேரிப் பறையர்களின்
திருவுருவத் தரிசனத்தில்,
ஏழையர்தம் தோளோடு
இணைந்து, மக்கள்தமைக்
கீழென்றும் மேலென்றும்
கேவலங்கள் செய்வார்தம்
சூழும் சதியனைத்தும்
தூளாக்கி, ஏழையர்க்கு
வாழும் நெறிகாட்டி
வாதாடும், வழக்காடும்
தோழரென வாழ்ந்துலகின்
துணையாக நிற்பாரில்,
பானையிலே தேளிருந்து
பல்லால் கடித்ததென்னும்
ஆனைப் பெரும் புளுகை
அவிழ்த்து விட்டு, கேலிக்குத்
தாளாய் ஆகுமொரு
சேவகர்தம் கூட்டுறவில்,
உச்சி தனை முகந்தால்
உன்மத்த வெறியேற்றும்
பச்சைப் பசுங்குழந்தை
பால்வடியும் திருமுகத்தில்,

அச்சில் வடித்தெடுத்த
அழகுத் திருவுருவாய்
இச்சைக் குகந்தவளாய்
இதயம் கவர்ந்தவளாய்
நச்சுமொரு காதல்உள
நாயகியாள் தன்னுருவில்
எல்லாம்—
கண்ணனென்று முன்னவர்கள்
கட்டுரைத்த தெய்வமதைக்
கண்ணெதிரே பிரமாணக்
காட்சியெனக் கண்டறிந்தான்!

11

இவ்வாறாய்—
மாதேவன் மாமாயன்
மலரின்மேல் வீற்றிருப்போன்,
சீதேவி, சரஸ்வதியாள்,
சிமயமலைத் தேவியென
ஏதேதோ பேரிட்டே
இயம்புகின்ற தெய்வமெலாம்
பூதேவர் என்றுசொலும்
புகழ்படைத்த அரும்பிறவி
மானிடர்தம் தோற்றத்தில்
வந்துநிற்கும் தத்துவத்தைத்
தானெடுத்து நற்கவிதைச்
சாற்றினிலே தந்துவிட்டான்!

என்றாலும்—
தெய்வதமாய்க் காட்சிதரும்
திருவுலக மானிடர்கள்

உய்வகைகள், செய்முறைகள்
உணர்ந்தறிய மாட்டாது,
உப்புக்கும் சிறுபுளிக்கும்
ஒருவேளைச் சோற்றுக்கும்
ஒப்புக் கொடுத்தவராய்,
உரிமை இழந்தவராய்,
சிற்றடிமைப் பட்டுநிதம்
சீரழிந்து, தலைவிதிவந்
துற்றதெனச் செயலிழந்து,
உணர்விழந்து, உயிரிழந்து,
குற்றேவல் பிழைப்பினிலே
குன்றிக் கிடப்பதையும்
நற்றவத்துக் கவிநாதன்
நாளெல்லாம் கண்டுமனம்
சற்றேனும் தாளாது
சங்கடங்கள் பட்டுழன்றான்!

## 12

மற்றைப் பெரியாரோ—?
மானிடர்தம் வாழ்வினிலே
உற்றபல நோய்நொடிக்கே
உரித்தான நன்மருந்து
மற்றை உலகினில்தான்
வாய்க்குமெனப் பலகூறிக்
கற்றசித்து வித்தையெலாம்
காட்டி, கதை கட்டிவிட்டார்!
உண்டு களிப்பதற்கே
உணவில்லாப் பஞ்சமென்றால்
'பண்டுநீ புரிந்திட்ட
பழம்வினையின் பய'னென்றார்!

'பண்டைப் பழம்வினைக்கே
பரிகாரம் செய்தக்கால்
உண்டுண்டு பரமபதம்
உண்'டென்று சொல்லிவிட்டார்!
கொண்டவளும், பிள்ளைகளும்
கும்பிக் கொதிப்பாலே
சுண்டி முகம்வாடிச்
சுருக்குற்ருர் என்றக்கால்,
'பெண்டுபிள்ளை என்பதெலாம்
பேய்மாலம் மாய்மாலம்;
கண்டிதனை யோர்ந்தார்க்கே
கதிமோட்சம் உண்'டென்ருர்!
அன்ருடப் பாட்டுக்கும்
அடுத்துவரும் வேளைக்கும்
தின்று பசியாற்றத்
தீனியில்லை என்றக்கால்,
'ஊற்றைச் சடலமடா!
ஊன்பொதிந்த பாண்டமடா!
காற்றடைத்த பைபோலக்
கண்மயக்கும் தோற்றமடா!
நாற்றம் பிடித்தவொரு
நவத்வாரக் கோட்டையடா!
பீற்றல் துருத்தியடா!
பீடையடா! இதைச் சதமாய்
ஏற்றுத் திரிவதுவோ?'
என்றெல்லாம் பேசிவிட்டார்!
'இந்திரனுர் லோகமொன்று
இருக்குதடா! அவ்வுலகில்

சிந்தைக் கவலேயில்லே!
செல்லரித்த வாழ்வில்லே!
கொந்தும் பசிப்பணியாம்
கொடுமைக்குப் பயமில்லே!
கற்பகமாம் தருவுண்டு!
கறக்கக் குறையாத
அற்புதமாம் பசுவொன்றும்
ஆங்குண்டு! ஆதலிஞல்,
பரம்பொருளேத் தினம்நீயும்
பாடிப் பரவிவிட்டால்
குரம்பைதனே விட்டங்குக்
குடிபோகும் நாளேயிலே,
அரம்பையர்கள் சூழவந்து
அமுதம் வழங்கியுன்றன்
கரம்பற்றிச் சுகபோகம்,
கனபோகம் தரும்அரிய
வரம்பெறலாம்! அத்தகைய
வாய்ப்புண்டு!' என்றெல்லாம்
வரம்பற்ற கதைபலவும்
வாரிவழங்கி விட்டார்!

13

பாரதியோ—?
செத்திட்ட பின்னரொரு
சிவலோகம் வைகுந்தம்
சித்திக்கும் என்றெல்லாம்
செப்புகின்ற பேர்வழியைப்
பித்தனென்றும், அவனுரைகள்
பேய்க்கூற்றே ஆகுமென்றும்

சத்தியங்கள் செய்துவிட்டான்!
சங்கெடுத்தும் ஊதிவிட்டான்!
'குத்து விளக்கினைப்போல்
குலம்விளக்க வந்தவொரு
பத்தினியை, அன்னவள்தன்
பாலொடுதேன் கலந்தன்னத்
தித்திக்கும் இதழமுதை,
சிறுதேர் உருட்டியுயிர்ச்
சித்திரம்போல் ஆடிவரும்
செல்லக் குழந்தையினை,
வைத்த பெருநிதியை,
மாடுமனை, காடுதனைச்
சித்த விகாரமென்றும்,
தெளிவில்லாக் கலக்கமென்றும்,
பித்தமனப் பேயதனின்
பேதலிப்பே ஆகுமென்றும்,
எத்தனைபேர் எவ்விதமாய்
எடுத்தெடுத்துச் சொன்னாலும்
அத்தனையும் பொய்க்கூற்றே
ஆம்! அதிலே ஐயமில்லை!
கொத்தவரும் பாம்பினையும்,
கொட்டுகின்ற தேளினையும்,
குத்திரங்கள் பலபுரியும்
கொடியரது சூழ்ச்சியையும்,
பொய்த்தவெளித் தோற்றமெனப்
புகலுவதில் பொருளுண்டோ?
இத்தரையீர்! இத்தகையோர்
எவரெவர்தான் என்றாலும்,

அத்துபடி யாகிவிட்ட
அறிஞரவர் எனநம்பிப்
புத்தியினைப் பறிகொடுத்துப்
போகாதீர்!' என்று நமக்
குத்தரவு போட்டுவிட்டான்!
உறுதிமொழி கேட்டுவிட்டான்!

## 14

'வானகவாழ் வென்பகெலாம்
வளமார்ந்த கற்பனைதான்!
ஆனதனால் அதைநம்பி
அறிவைப் பறிகொடுத்துத்
தானதனை எய்துதற்காய்,
தாரணியில் நீரெடுத்த
ஊனுடம்பை, உமக்குற்ற
ஒருவாழ்வை, திருவாழ்வைச்
சூனியமாய், மாமாயச்
சூதாய் மனத்தெண்ணி
வீணில் அலைக்கழிந்து
வெந்து குமையாதீர்!
வானவர்தம் வாழ்வென்றால்
வையகத்தே அவ்வாழ்க்கை
மானிடர்தம் குலத்துக்கு
வாய்ப்பதற்கும் வழியுண்டு!
கூனச் சிறுமையெலாம்
கூண்டோடு போயொழிந்தால்,
ஈனக் கவலையெலாம்
எருவானால், நீறானால்,
அடிமைச் சிறுவாழ்வு
அடிமாண்டு மண்ணானால்,

மிடிமைக் கொடுமையெலாம்
மேதினியை விட்டகன்றால்,
சாதிமத பேதமெனும்
சாக்காட்டுப் பேய்மாலம்
நாதியற்றுச் செத்தொழிந்தால்,
நல்ல குணங்களெல்லாம்
மேவி நமையடைந்தால்,
மேதினியி லேயே நாம்
தேவர்களாய், இந்திரராய்,
தெய்வதமாய் எந்நாளும்
சீவித் திருந்திடலாம்!
சிறப்புக்கள் எய்திடலாம்!
பூவுலகீர்!' எனும் புதிய
போதம் புகன்றுவிட்டான்!

15

இவ்வாறாய்—
பாரதியின் தத்துவத்தைப்
பலபடியாய்ப் பார்த்தாலும்,
பாரகத்தை, மானுடத்தைப்
பாலித்து, புவிவாழ்வைச்
சீரமைத்து, நமக்கிந்தச்
சென்மத்தே நலம்விளைக்கும்
ஓரமைப்பின் உட்பொருளே
உருக்காட்டி நின்றிலங்கி,
தாரகமாய், மந்திரமாய்
தானொலிக்கும் உண்மைதனை

நீரெல்லாம் தெளிவாக,
நேராகக் கண்டிடலாம்!
எனவேதான்—
'பொய்க்கும் கலியுகத்தைப்
பூண்டோடு பேர்த்தெறிந்து
மெய்க்கும் கிருதயுகம்
மேதினியில் தோற்றமுற
வைக்கும் மெய்ப்பணிக்காய்
வரம்பெற்று வந்துற்றேன்!
உய்க்கும் வகையிதனை
உலகத்தார் கண்முன்னே
மெய்ப்பிப்பேன்!' என்றவனும்
வஞ்சினமாய்ச் சூளுரைத்தான்!

16

சூளுரைத்துச் சென்றவன்தன்
சொல்லை, அருள்மொழியை
நீள்புவியில் நனவாக்கும்,
நிலைபேறு தானுக்கும்
வேள்விதனை நாமியற்றி
வென்றிடுவோம்! என்றுசொலி
மீள்கின்றேன் சபையோரே!
மீட்டும் பல வணக்கம்.

1960

# 14

## "மாநிலம் பயனுற வாழ்வதற்கே!"

### 1. அழைப்பு

1

சீராமன் தன்கதையைச்
செய்தளித்த கம்பனின்பின்
ஓரா யிரம்வருடம்
ஓய்ந்து கிடந்தபின்னர்
வாராது வந்தடைந்த
மாமணியை,
பாரதத்தில்
ஆறு யிரம்மைல்கட்
கப்பா லிருந்துவந்த
சோராதி சோரர்கள் செய்
சுரண்டற் கொடுமைகளை
வேரோடு பேர்த்தெறிந்து
வெட்டித் தகர்க்கவந்த
பேரிடியை,
பாரதத்தாய்
பெற்றெடுத்த மக்கள்குலம்
வீராதி வீரமெலாம்
வெந்து தணிந்தடங்கி
நீறான நிலைபோக்கி,
நெருப்பைக் கக்கவைத்த
சூறா வளிக்காற்றை,

சுதந்திரமாம் வேள்வியிலே
நூறு யிரம் உயிரும்
நோன்பேற்றுப் பலிகொடுக்க
வாரீர் எனமுழக்கி
வையகத்தைத் துயிலெழுப்பும்
சூரியனும் சோதியினை,

சுதந்திரத்தின் மாண்பிழந்து
மண்ணடிமைப் பட்டிருக்கும்
வசையொருபால் சீரழிக்கப்
பெண்ணடிமை பேசிநின்ற
பேடியரை வேரறுக்க
விண்ணிடிபோல் கணகணத்த
காண்டீவ வில்லதனை,

சிப்பியிலே சிக்கிவிட்ட
முத்தெனவே சிறைப்பட்டு
உப்புக்கும் சோற்றுக்கும்
உழன்றழன்று வாடிநின்ற
பாட்டாளி மக்கள் துயர்
பஞ்சாய்க் கருகுதற்குத்
திட்டிவழி காட்டிவிட்ட
தேஜோ மயக்கொழுந்தை,

வாட்டும் துயர்பலவும்
வளர்த்தே பணந்திரட்டி
ஆட்டங்கள் போடுகின்ற
அநியாயக் காரர்களை
மூட்டோடு பேர்த்தெறிந்து
முடிக்கவந்த அதிர்வேட்டை,

கள்ளிப் பொறிபறக்கும்,
கானல் அலை பிறக்கும்,
முள்ளும் வெள்ளெருக்கும்
மூண்டே வழிமறிக்கும்,
களர்நிலமாய் மாறிவிட்ட
கன்னித் தமிழ்நிலத்தைக்
கிளரிப் பண்படுத்திக்
கேடு செயும் களைநீக்கி
விளைநிலமாய் மாற்றவந்த
வெற்றிக் கொழுமுகத்தை,

நித்தமந்தத் தமிழென்னும்
நிலத்தே பற்பலவாம்
புத்தம் புதுக்கலையும்,
பூமணக்கும் பாவினமும்,
சித்தத் தினிப்பூட்டும்
செங்கரும்புக் கற்பனையும்,
சத்தான சிந்தனைநற்
சாறூறும் கனிவகையும்,
பித்தம் தனைநீக்கிப்
பிணிபோக்கும் பச்சிலையும்,
செத்தாரும் துள்ளியெழச்
செய்யுரச மூலிகையும்,
கொத்தாய், குலைகுலையாய்க்
கொழித்துச் செழித்தோங்க
புத்தமுத வான்மாரி
பொழிகாள மேகத்தை,

தாய்மொழியாம் தமிழ்மொழிக்குத்
தண்ணீர் தெளித்துவிட்டுப்

போயொழிந்த அன்னியர்கள்
புகுத்திவிட்ட அயல்மொழிக்குக்
கோயில்கட்டிப் பூசைசெயும்
கோடாலிக் காம்புகளின்
வாய்கிழிக்க வந்துதித்த
வச்சிரப்பே ராயுதத்தை,

சாதியென்றும் இனமென்றும்
சழக்காடி, வழக்காடி,
ஆதிப் பழம்நாட்டை
அறுத்தெடுத்துத் துண்டாக்கும்
பாதகத்தைச் செய்யவழி
பார்க்கின்ற நீசரது
சூதைக் கருவறுத்துச்
சுதந்திரத்தைத் தற்காத்து,
தீதனைத்தும் வேரறுத்துச்
செயத்தம்பம் நாட்டுதற்காய்
பனிக் கோட் டிமயமுதல்
பகவதித்தாய்க் கோடிவரை
தனிக்கோட்டை யாய்விளங்கும்
தாயகத்தின் ஒற்றுமையை,
பத்தோடு எட்டுமொழி
பயின்றாலும் பாரதத்தின்
சித்தமெலாம் வச்சிரம்போல்
சேர்ந்திருக்கும் உண்மையினை,
எத்தரெலாம் கதிகலங்க
எதிரொலிக்கும் போர்முரசை,

பாட்டுத் திறத்தாலிப்
பாரகத்தைப் பாலித்துக்

கேட்டையெலாம் வேரறுத்துக்
கிருதயுகம் தோற்றுவித்துக்
காட்டிடுவேன் என்றுசொலும்
கட்டுறுதி கொண்டிருந்த
பாட்டுக்கொரு கவியை,
பார்புகழும் பாரதியை
நாட்டுமக்கள் நன்குணர
நல்லதொரு விழா நடத்தும்
காரைக்குடி நகரின்
கலைமன்றத் தோழர்களே!
ஆரமிழ்தம் போலினிக்கும்
அருமைத் தமிழ்க்கவிதை
கூறவந்த பாவலரே!
கூட்டமிட்டு வந்தமர்ந்த
ஊரவரே! தாய்மாரே!

உமக்கெல்லாம்—

சிற்றம் பலத்தான் நான்
சிரம்தாழ்த்திச் சேவித்துக்
கற்றறிந்த பாவலர்சூழ்
கவியரங்கைத் தொடங்குகிறேன்.

2

எங்கவிஞன் பாரதியும்
என்றோ ஒரு நாளில்
பொங்கிவந்த ஆத்திரத்தால்,
புழுக்கத்தால், சிவசக்தித்
தாயை எதிர் நோக்கித்
தணியாத வேட்கையொடு

வாய்நேர்ந்து விட்டதொரு
வார்த்தையினை நீரறிவீர்:

''நல்லதோர் வீணை செய்தே—அதை
நலங்கெடப் புழுதியில் எறிவ துண்டோ?
சொல்லடி சிவசக்தி—எனைச்
சுடர் மிகும் அறிவுடன் படைத்து
விட்டாய்!

வல்லமை தாராயோ?—இந்த
மாநிலம் பயனுற வாழ்வதற்கே!''

என்றவனும் கேட்டவிதம்
எல்லோரும் நன்கறிவோம்.
என்றாலும் அவனிங்கே
இருந்திட்ட நாள்முடிய
மாநிலத்தார் பயனுறநல்
மார்க்கம் பலவுரைத்து
நானிலமும் நாவலிக்கும்
நற்புகழைப் பெற்றுவிட்டான்.
ஆனாலும், நாம்இன்றோர்
அவலநிலை காண்கின்றோம்.
மாநிலமா? அதற்கர்த்தம்
மாகாணம் தானென்றும்,
நானிலமா? அதன்பொருளும்
நான்குமொழி பேசுகின்ற
பூ நிலத்தார் வாழ்ந்துவரும்
புவிப்பரப்பே என்றிங்கே
கூனச் சிறுமதியர்
குட்டைச்சாண் புத்தியினர்
மோனைத் தமிழ்மொழியில்
முழங்கிவரக் காண்கின்றோம்.

ஆனதனால்:—
பாரதியின் புகழ்பாடிப்
பாரை உயர்த்துகின்ற
தீரர் திருப்படையில்
சேர்ந்து நிற்கும் பாவலரே!
பாரதியின் வழிநின்று
பாரகத்தை வழிநடத்தும்
சாரதியாய் நீவிரெலாம்
கவிதைகளைச் சாற்றிடுக
என்றே ஒரு வார்த்தை
இயம்பி, உமை இனிமேல்
மன்றில் வர விடுப்பேன்.
வருக! கவி பொழிக!

## 2. அறிமுகம்

### 1. சவகர்லால்—மொழி

தவமகனும் பாரதியும் தமிழ்மொழியை வளப்படுத்த
நவநவமாம் வழிபலவும் நவின்றிட்டான்; அன்னவற்றைச்
சுவைமிகவே அவையினர்முன் தொகுத்தெடுத்துச் சொல்லவந்த
சவகர்லால் எனும்தக்கோய்! வந்துகவி சாற்றிடுக!

### 2. கருப்பட்டிக் கவிராயர்—கல்வி

துருப்பட்டு, செல்லரித்து, துயர்ப்பட்டு, அன்னியரால்
மருப்பட்டு, வலிகெட்டு, வாழ்விழந்த கல்விமுறை
உருப்பட்டுக் கடைத்தேறக் கவிசொன்ன உண்மைகளைக்
கருப்பட்டிக் கவிராயா! அரங்கத்தே காட்டிடுக!

### 3. அமிர்தலிங்கன்—இலக்கியம்

ஆட்டிப் படைத்திடும் அவதான வித்தையில்
அற்புதம் பலவும் செய்த
சீட்டுக் கவிப்புகழ் நாட்டுஞ் சரவணச்
செம்மலின் மரபில் வந்து
பாட்டுச் சுவைமிகக் கூட்டிக் கவிசொலும்
பாவல! அமிர்த லிங்க!
பாட்டுக் கொருகவி காட்டு மிலக்கியப்
பாதையைப் பகர வருக!

### 4. தமிழழகன்—சமுதாயம்

பழகு தமிழிற் கவிசொன்ன
பாரதி மக்கட் சமுதாயம்
அழகு கொழிக்க, வளம்காண,
அடிமை விலங்கை அறுத்தெறிந்தே
ஒழுகும் முறையை, வாழ்வியலில்
ஓங்கும் வழியை எடுத்துரைத்தான்;
அழகு தமிழில் தமிழழக!
அவற்றை நீயும் சொலவருக!

### 5. மதுரை வளவன்—தொழில்

எழிலார் பொருட்கள் பற்பலவும்
இயற்றித் தந்தே எமக்கருளும்
தொழிலார் தம்மைத் தெய்வமெனத்
தொழுதான் கவிஞன்; அவன்கவிதைப்
பொழிலே திரிந்து மீண்டெம்முன்
போந்த மதுரா புரிவளவா!
தொழிலால் வையம் பயன்மேவும்
சூட்சுமம் தன்னைச் சொலவருக!

### 6. 'சக்தி'—அரசியல்

சிவமாகத் தோன்றிச் சின்னேரம் முன்னால்
சிந்தை சிலிர்த்திடப் பாடி
நவமான இன்பம் பற்பல தோன்ற
நல்லிசை நல்கிய நண்பா!
சிவம்மாறிச் சக்தி வடிவாகிப் போன
செப்பிடு வித்தைகள் ஏனோ?
அவமான வாழ்வைத்துடைத்துயர் வெய்தும்
அரசியல் கூறிடத் தானோ?

### 7. தேசிகன்—தத்துவம்

இத்தரை மீதில் மக்கள்
வாழ்விடை ஏற்றம் காண
மெய்த்தவம் பூண்டே இந்த
மேதினிப் பொருளைக் கண்ட
வித்தகக் கவிஞன் எங்கள்
பாரதி விளம்பும் ஞான
தத்துவ மார்க்கம் தன்னைத்
தேசிகா! சபையில் சாற்றாய்!

## 3. முடிப்பு:

வானமெலாம் அளந்தறியும் வன்மை பெற்ற
வண்தமிழை அரியணையில் ஏற்றி, நாட்டார்
மானமெலாம் காத்துயரும் வழியைச் சொன்ன
வாக்காளன் பாரதியார் நந்தம் கொம்புத்
தேனனைய தாய்மொழியை வளர்க்கச் சொன்ன
செய்தியெலாம் எடுத்துரைத்தே உலகோர்
முன்னே

ஆணை நடை நாம்நடக்க வேண்டும் என்னும்
ஆசையினைச் சவகர்லால் நமக்குத் தந்தான். 1.

பாலோடு சேர்த்துண்ட மொழியை, நந்தம்
பைந்தமிழைப் பயிற்சிமொழி யாக்கா
வண்ணம்
கோலேந்தி நாடாள்வார் இந்நாள் வீணில்
குதர்க்கங்கள் செய்வதனைச் சுட்டிக் காட்டி,
மேலையர்தம் அறிவெல்லாம் தமிழில் கற்று
மேம்படுவோம்; இதைமறுப்போர் தமக்கு
நாங்கள்
காலனைப்போல் விளங்கிடுவோம் என்றே நம்முன்
கருப்பட்டிக் கவிராயன் கழறக் கேட்டோம். 2.

யாமறிந்த மொழிகளிலே தமிழைப் போன்றோர்
இனியமொழி யாம்கண்ட தில்லை என்றே
பூமியெலாம் எதிரொலிக்கப் புகன்ற நந்தம்
புகழ்க்கவிஞன் இலக்கியத்தால் புவனம்
தன்னைச்
சேமமுறச் செய்யுவகை பலவும் செப்பி,
செந்தமிழின், இலக்கியத்தின் பயனை, நெஞ்சம்
காமுறுநற் சொல்வளத்தால், கருத்தால், நல்ல
கவிதையினால் எடுத்துரைத்தான்
அமிர்தலிங்கன். 3.

எல்லோரும் ஓர் குலமாய், இனமாய், மக்கள்
எல்லோரும் மன்னர்களாய் வாழ்வோம்
என்றே
நல்லதொரு சமுதாயம் தன்னை வாழ்வில்
நாம்காணும் மார்க்கத்தை நன்றாய்ச் சொன்ன

வல்லாளன் பாரதியின் வழியில், இன்றை
வாழ்வியலில் சமுதாய வாழ்க்கை தன்னைச்
செல்லரிக்கும் தீமையெலாம் போக்கி, வாழ்வைச்
செப்பனிடத் தமிழழகன் கவிதை
சொன்னான். 4.

தேட்டமின்றி விழியெதிரே நாட்டார் காணும்
தெய்வமெனத் தொழிலாளர் தம்மை
வாழ்த்தும்
பாட்டாளன் பாரதியார் தொழிலின் மூலம்
பாரதத்தை வளப்படுத்தி உலகோரோடு
கூட்டாகக் கைகோத்து நின்று, வெற்றிக்
குலவையிட்டு, பூமியிலே அமர வாழ்வை
நாட்டுதற்குப் புகன்றதொரு வழியில் நின்று
நற்கவியைத் தென்மதுரை வளவன்
சொன்னான். 5.

அரசியலின் பேராலே நாட்டில் இந்நாள்
அநியாயம் பலப்பலவும் நடக்கும் போக்கை
உரைசெய்து, மக்கள்குலம் அனைத்தும் வாழ,
உலகியலை, அரசியலை வகுத்து வாழ்வில்
புரைசேர்ந்த புன்மையெலாம் பொசுக்கித் தள்ளி,
புதியமுறை அரசியலைப் புகன்று, வெற்றி
முரசறைந்த கவிமகனை அவையோர் முன்னே
முன்னிறுத்திப் பேசவைத்தான் கவிஞன்
சக்தி. 6.

வெந்ததையே உண்டுறங்கி நாளைப் போக்கி
விதிவந்தால் சாவதென நம்பி நம்பி,
நொந்துமனம் சலித்திட்ட மக்கள் வாழ
நோன்பேற்று வந்திட்ட கவிஞன், மக்கள்

இந்தவொரு ஜென்மத்தே அமர வாழ்வை
 எய்துமொரு தத்துவத்தை எடுத்துச் சொன்ன
விந்தையினைத் தேசிகனுர் விளக்கிச் சொல்லும்
 விந்தையெலாம் கேட்டுள்ளம் உவகை
 கொண்டோம்.

(வேறு)

கவிஞர் எழுவர் அரங்கேறிக்
 கற்பனை யோடும், தம்நெஞ்சில்
சவியுறத் தெளிந்த பொருளோடும்
 கலந்தே சமைத்த கவிதைகளால்
புவியிடை மாந்தர் வாழ்வியலில்
 பயன்சேர் வழிகள் புகன்றிட்டார்;
செவியுறக் கேட்டோம்; இன்புற்ருேம்;
 சிந்தை நிறைந்தோம்; மகிழ்வுற்ருேம். 8.

தொட்டதை யெல்லாம் பொன்னுக்கும்
 தோன்றல் எங்கள் பாரதியின்
பட்டறை தன்னில் பதமான
 பாவலர் தம்மை இவண் கண்டோம்;
கட்டியம் கூறிப் புதுவாழ்வைக்
 காணப் பிறந்த காவலர்போல்
கொட்டி முழக்கிக் கவிசொன்னுர்,
 குவலயம் நற்பயன் கண்டிடவே! 9.

மாநிலம் வாழக் கவிசொன்ன
 பாவலர் வாழ்க! அவர்கவிதைத்
தேனினை மாந்தி மனங்களித்துத்
 திளைத்தோர் வாழ்க! கவியரங்கம்
தானமைத் திட்ட கலைமன்றத்
 தாரும் வாழ்க! பாரதியின்
வானினை எட்டும் புகழ் வாழ்க!
 என்றும் வையம் வாழியவே! 10.

1962

# 15

# தாகூர் கண்ட மனிதன்

1

வங்கத்தாய் பெற்றெடுத்த
வயிரத்தை, கவிதைமகள்
அங்கத்தே ஒளிகூட்டும்
ஆணிமுத்தை, இந்தியராம்
எங்கள் புகழ்வளர்க்கும்
இரத்தினத்தை, உலகனைத்தும்
எங்கள்கவி, எங்கள்கவி
என்றுரிமை கொண்டாடும்
தங்கத்தை, கவியரசர்
தாகூரைப் போற்றுதற்காய்த்
தண்பொருனைக் கரையருகில்
தமிழரங்கம் கூட்டுவித்த
நண்பர்களே! அவைத்தலைவ!
நமைச் சார்ந்து செந்தமிழின்
பண்பறிந்து கவிபாடும்
பாவலரே! பாட்டமுதம்
உண்பதற்காய் வந்திருக்கும்
ஊராரே! உமக்கெல்லாம்

அம்பலத்தான் யானிந்த
அரங்கத்தே கரங்குவித்துக்
கும்பிட்டேன். இனிக் கவியைக்
கூறத் தொடங்குகின்றேன்.
வரகவிஞர் தாகூரும்
வையத்து மானிடர்தம்
தரம் குறித்தும், அன்னவர்தம்
தன்மை களைக் குறித்தும்
திறம் குறித்தும், கண்டறிந்து
சித்திரித்த உண்மைகளை
அரங்கத்தே கூறுதற்கே
ஆணையிட்டார்; ஆணையதைச்
சிரங் கொண்டு சிலவார்த்தை
செப்புகின்றேன்; கேட்டிடுவீர்!

2

'மானுடத்தைப் பாடுவதா?
மாயையெனும் இவ்வுலகில்
ஊனுடம்பு தாங்கியவோர்
ஊற்றைச் சடலமிது!
பேனும் ஈ கொசுகும்
பிச்சுப் பிடுங்குகின்ற
ஈனப் பிறவியிது!
எல்லையிலாத் தொல்பிறவி
ஆனதொரு மாகடலில்
அலைக்கழியும் துரும்பொத்த
மேனியிது! மாமாய
வேடமிது!'

என்றெல்லாம்

மாநிலத்தில் பல்லாண்டாய்
மாதவரும், மதம் கண்ட
ஞானியரும், 'மானுடத்தை
நான் பாடேன்!' என்றுரைத்துப்
போனவரும், வாழ்வியலைப்
பொய்யென்று சொன்னவரும்
சேனையென நடைபோட்டுத்
திரிந்தகதை எல்லாமும்
நானறிவேன்; நீரறிவீர்;
நாடெல்லாம் நன்கறியும்!
ஆனதனல்—
மானிடத்தைப் பாடவந்த
மாகவியும் இவ்வாறே
தானியம்பிச் சென்ருரா?
தடுமாறி நின்ருரா?
என்றெல்லாம்—
வினவும் குறி பலவும்
விடைகாணும் வேட்கையொடு
எனைவந்து சூழ்வதுவும்
இயல்பேதான்; இந்நிலையில்
நினைக்கின்றேன்; அவர்சொன்ன
நெறிமுறையை, கவிதைமொழி
தனையெல்லாம் நெஞ்சத்துள்
தானெண்ணிப் பார்த்தவரை
இனம்கண்டு, உம்மிடத்தே
எடுத்துரைக்க ஓரளவு
முனைகின்றேன். கவியரசர்
மொழிந்ததுதான் என்னேயோ?

## 3

அன்னவரோ—
வையத்து வாழ்வியலை
மாயை மயக்கமென்றே
பொய்யென்றே சொல்லிவைத்த
புலவரிலை! அஃதேபோல்
உய்யும் நெறியுணர
உலகத்தைத் துறப்பதுவே
துய்யவழி என்றுரைக்கும்
துணையில்லை! மாறாக,
மண்ணுலகை, மண்ணுலகில்
வாழுகின்ற மானுடத்தைக்
கண்ணுக் கினியனவாய்க்
கண்டறிந்தார் நம்கவிஞர்.
'கவின்நிறைந்து விளங்குவதிக்
காசினியாம்; இதில்வாழும்
புவிவாழ்வை நானிழந்து
போவதற்குச் சம்மதியேன்!
பற்றறுத்து வாழ்வதுதான்
பாதையெனச் சொன்னாக்கால்
மற்றதனை நான்ஏற்கேன்!
வாழ்வியலில் இன்புதரும்
சுற்றுத் தளைகளில்தான்
சுகம்காண்பேன்! விடுதலையின்
பெற்றியையும் நானவற்றில்
பெற்றுச் சிறந்திடுவேன்!
தேன்நிறைந்த வாசமலர்
செறிந்திருக்கும் பூங்காவாய்

மாநிலத்தை, வாழ்வியலை
மதிக்கின்றேன்!' என்றுரைத்த
ஞானியவர் என்பதையும்
நாமறிவோம்.
இம்மட்டோ?
'இந்தியத்தாய் மடிமீது
எந்நாளும் வாழ்வதற்குச்
சிந்தைகளி கொள்கின்றேன்.
செத்தொழிந்து போனாலும்,
இந்தப் பிறவிதனை
இழந்தாலும், இனிமேலே
எந்தப் பிறவியிலும்
இங்கேயே நான் பிறப்பேன்!'
என்றெல்லாம்—
தனைப்பயந்த தாய்நாட்டை,
தாய்நாட்டு மக்கள்தமை
நினைவிருத்திக் கொண்டவொரு
நெறியாளர் என்பதையும்
அனைவருமே நன்கறிவோம்!
பிறவிப் பெரும்பேற்றைப்
பிணியென்றே, அப்பிணிக்குத்
துறவுநிலை ஒன்றேதான்
துயர்துடைக்கும் மருந்தென்றே
மறந்துமவர் எந்நாளும்
வாய்நேர்ந்து விட்டதிலை!
'சிறந்ததிந்தப் பூவுலகம்!
சிருஷ்டித் தொழில் புரியப்
பிறந்ததிந்த மானிடமாம்
பெருங்கூட்டம்!' என்பதனைத்

திறந்தெரிந்து செப்பியதோர்
செழுங்கவிஞர் அவர்! அதனால்
துறவுநிலை பூண்டாலும்,
தொட்டறிய வொண்ணாத
இறைநிலையின் திருவுருவம்
இங்குள்ள மானிடத்தில்
உறைகின்ற உண்மையையும்
உரைத்திட்டார்.
கவிஞரவர்
அறைந்திட்ட திருவாக்கை
அறியோமோ நாமெல்லாம்?

4

'மாலை தனையுருட்டி,
மணியுருட்டி, மந்திரத்தை
மூலை இருட்டினிலே
முணுமுணுத்து, தாளிட்ட
ஆலயத்துக் குள்ளேநீ
ஆரையப்பா தேடுகின்றாய்?
ஆண்டவனா? கண்களைநீ
அகலத் திறந்துகொண்டு
வேண்டுமட்டும் வெறித்தங்கே
விழித்தாலும், நீதேடும்
ஆண்டவனைக் காண்பாயோ?
அறிவிலியே! திரும்பிப்பார்!
பூசை, புனஸ்காரம்,
பூமாலை, நறுந்தூப
வாசம் தனைவிடுத்து
வருவாய்! வந்துனது

ஈசன் தனைவெளியே
இனங்காணும் வகைபாராய்!

கட்டாந் தரைப்பரப்பை,
காட்டை, வெறுந்தரிசை
வெட்டிப் பயன்படுத்தி
வேர்வை தனைப்பாய்ச்சி,
பாரைப் புரந்துணவு
படைக்கும் தொழிலுக்காய்
ஏரைப் பிடித்துழுமோர்
ஏழைமகன் திருவுருவில்,
சாலை தனையமைக்கச்
சரளைக்கல் உடைக்கின்ற
வேலைதனில் ஈடுபட்டு
வெய்யிலிலே நொந்துலரும்
கூலியிடத் தே கடவுள்
குடிகொண் டிருப்பதையுன்
போலித் தனம்விடுத்தே
புரிந்திடுவாய்!' என்றலவோ
ஞாலம் புகழ் தாகூர்
நவில்கின்றார்!

## 5

தொழிலியற்றல் வெறும்மாயைத்
தோற்றமிலை! அத்தொழிலில்
எழில்பிறக்கும்! எல்லையிலா
இன்பமெலாம் தான்சுரக்கும்!
ஆண்டவனே சிருஷ்டியெனும்
ஆக்கத் தொழில்தன்னைப்

பூண்டிருக்கும் வேளையிலே,
புவனத்து மானிடர்கள்
வேண்டுமட்டும் பொருள்படைக்கும்
வினைகளிலே ஈடுபட்டும்,
ஆண்டி பராரியென,
அனாதையென இவ்வுலகில்
தூண்டிற் புழுப்போலத்
துயருற்று வாழ்வதையும்
மூண்டெழுந்த அனுதாப
மூச்சோடு கண்டறிந்தார்!

நீர்க்காவி தினமேறி,
நிறம்மாறி, அழுக்கேறிச்
சீர்கெட்டுக் கிழிபட்ட
சீரை யுடுத்தவரை,
வலைவீசி மீன்பிடித்து
வயிற்றைக் கழுவுகின்ற
நிலையினிலே வாழ்வாரை,
நெற்கதிர்கள் வயல்வெளியில்
தலைசாயச் செய்வதற்காய்
தகிக்கின்ற கொடுவெயிலில்
அலைக்கழியும் மானிடரை,
அழகழகாய்த் துணிமணிகள்
பலவற்றை நெய்பவரை,
பாரகத்தே இவ்வாறாய்
உலையாத பலதொழிலில்
உழைப்பாரை எல்லாரும்
கலைஞரவர் தம்வாழ்வில்
கண்ணாலே கண்டறிந்த
காரணத்தால்—

'மானிடத்தைப் புகழ்ந்துகவி
மாலைதனைச் சூட்டுதற்கே
நான்பிறந்தேன்! மாகடல்போல்
நானு திசைப்பரப்பும்
பரந்திருக்கும் மானிடத்தைப்
பாடிப் பரவுகின்றேன்!
கரம்திறந்து அன்னவரைக்
கட்டித் தழுவுதற்கும்
விரும்புகின்றேன்!' என்றெல்லாம்
விளம்புகின்றார் நம்கவிஞர்.

என்றாலும்—
பாடுபடு வோர் வீட்டில்
பசிப்பேயின் திமிராட்டம்,
கூடுவிட்டு வந்தபுலி
கொண்டாட்டம் போடுதல்போல்
தேடிவந்து கொல்லுகின்ற
சீக்கு, நோய்நொடிகள்,
ஏடுதனைத் தொட்டறியா,
எழுத்தறியா அறியாமை,
மூடப் பழக்கங்கள்,
முன்னேறத் தெரியாது
வாடி உருக்குலைந்து
வஞ்சகர்தம் சூழ்ச்சியிலே
ஆடுகளைப் போல்வாழ்வை
அடகுவைக்கும் புல்லடிமை
இவையெல்லாம்—
சாடிநின்று, அவர்வாழ்வைச்
சுடுகாடு ஆக்குவதை

நீடுலகில் அவர் கண்டு
நெஞ்சம் குமுறியதால்,
'கேடுகெட்ட பழங்காலக்
கீழ்மைச் சிறுமையே! நீ
ஓடிப்போ! எமைவிட்டு
ஒழிந்தொடுங்கி ஓடிப்போ!
வாடும் துயர்பலவும்
வழங்கிடுமுன் கிழ முகத்தை
மூடியவா ரோடிப்போ!
முன்னேறும் புதுமையிலே
தேடிவரும் ஆனந்தத்
தேனையெல்லாம் மாந்த விட்டே
ஓடிப் போ!' என்றவரும்
ஓட்டுகின்ருர் ஓர்கவியில்!

6

ஒளியின் குழந்தைகளாய்
உற்பவித்த மானிடர்கள்
ஒளியிழந்து புவிவாழ்வில்
ஓய்ந்து கிடப்பதுவோ?
ஒளிபிறந்தால், அவரெல்லாம்
உண்மை நிலை யுணர்ந்தால்,
களிபிறக்கும்! அவர் வாழ்க்கைக்
கதை சிறக்கும்! இன்பத்தேன்
துளி சுரக்கும்! வாட்டுகின்ற
துயர் பறக்கும்! வையகத்தின்
விழி திறக்கும்! பற்பலவாம்
வினை சிறக்கும்! தெய்வாம்சத்

தளி பிறக்கும்! இங்கேயே
அமரநிலை எய்துதற்கோர்
வழி பிறக்கும்! அந்நாளை
வையகமே கண்டுவக்கும்!
என்றெல்லாம்—
மொழி சிறக்க, மானிடத்தை
முற்றூன் பற்றுதலின்
எழில் சிறக்கும் பலபாட்டில்
ஏத்தி விட்டார் நம்கவிஞர்.
மானுடத்தின் வெற்றியினில்
மாறாத உறுதியொடும்,
நானிலத்து வாழ்வியலில்
நலியாத வேட்கையொடும்,
ஞானியவர் கூறியதில்
நான்சிறிதே கூறிவிட்டேன்;
மேனலத்தீர்! விடைகொண்டு
மீள்கின்றேன்; மறுவணக்கம்.

1961

அனுபந்தம் :

# குறிப்புக்கள்

## வானொலி

### 1. தமிழ் காட்டும் நல்லுலகு

1957 ஜனவரி மாதத்தில் அகில இந்திய வானொலி நிலையத்தார் கொண்டாடிய ரேடியோ வாரத்தின்போது, 14-1-1957 பொங்கல் தினத்தன்று, பேராசிரியர் திரு. அ. சிதம்பரநாதன் செட்டியார் தலைமையில் கவியரங்கம் நடைபெற்றது. அந்தக் கவியரங்கில் 'தமிழ் காட்டும் நல்லுலகு' என்ற பொதுத் தலைப்பின்கீழ், புறநானூறு, திருக்குறள், திருமந்திரம், கம்பராமாயணம், தாயுமான சுவாமி பாடல், பாரதி கவிதை முதலிய நூல்களிலுள்ள அறிவுரைகளுக்கு விரிவுரை கூறும் விதத்தில் ஆறு கவிஞர்கள் கவி பாடினார்கள்.
அப்போது

வண்மை இல்லையோர் வறுமை இன்மையால்
திண்மை இல்லைநேர் செறுநர் இன்மையால்
உண்மை இல்லைபொய் உரையி லாமையால்
ஒண்மை இல்லைபல் கேள்வி ஓங்கலால்

என்ற கம்பனது லட்சியக் கோசலச் சித்திரத்தை விளக்கிப் பாடி அரங்கேற்றிய கவிதை இது.

### 2. புதியதோர் உலகு: விஞ்ஞானி

14-4-1958 தமிழ் வருடப் பிறப்பன்று திருச்சி வானொலியில் பேராசிரியர் திரு. அ. சீனிவாச ராகவன் தலைமையில் ஒலிபரப்பான கவியரங்கில், 'புதியதோர் உலகு' என்ற பொதுத் தலைப்பின்கீழ் கவிஞன், அரசியல்

அறிஞன், விஞ்ஞானி, உழவன், ஞானி, குழந்தை, வணிகன், பக்தன் ஆகியோர் காண விரும்பும் லட்சிய உலகம் குறித்து, எட்டுக் கவிஞர்கள் கவிதை பாடினார்கள். அப்போது 'புதியதோர் உலகு' பற்றிய 'விஞ்ஞானி'யின் கண்ணோட்டத்தைப் பொருளாகக் கொண்டு அரங்கேற்றிய கவிதை இது. சில ஒட்டு வெட்டுக்களுடன் இங்கு அது இடம் பெறுகிறது.

## 3. இருவேறு உலகம் : பகுத்தறிவு வாதம்

மேலை நாடு பெரும்பாலும் பொருள் நாட்டத்திலேயே ஈடுபட்டிருந்ததாகவும், கீழைநாடு பெரும்பாலும் அருள் நாட்டத்திலேயே கவனம் செலுத்தி வந்ததாகவும் கருதுவதுண்டு. இதனால் இந்த இருவேறு உலகங்களின் தத்துவார்த்த சிந்தனைகளிலும் உலகாயத வளர்ச்சியிலும் வேறுபட்ட போக்குகள் தோன்றியதாகவும் கூறுவதுண்டு. எனினும் உலகம் அனைத்தும் ஒன்றாக வேண்டும் என்ற மனிதாபிமான உணர்ச்சி மேலோங்கி நிற்கும் காலம் இது. இந்தக் காலத்தில் இந்த இரு வேறு நாடுகளும் பரஸ்பரம் ஒன்றையொன்று புரிந்துகொள்வதற்கும், ஒன்றுக்கொன்று உதவி வளர்வதற்குமான உணர்வும் உத்வேகமும் அவசியமும் அவசரமும்கூட ஏற்பட்டு வருகின்றன. திருவும் தெளிவும் இரு வேறு உலகங்களாகப் பிரிந்து நிற்காமல், ஒரு பேருலகமாக மாறியே ஆகவேண்டும். மேலே கூறிய கருத்துக்களின் அடிப்படையில் 15-1-1959 அன்று, பொங்கல் திருநாளை ஒட்டி, 'இருவேறு உலகம்' என்ற பொதுத் தலைப்பின்கீழ் திரு. தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் தலைமையில் திருச்சி வானொலி ஒரு கவியரங்கத்தை ஒலி பரப்பிற்று. அந்தக் கவியரங்கில், கீழை நாடுகளின் அருட்செல்வம், மேலை நாடுகளின் பொருட் செல்வம், கீழை நாடுகளில் வளர்ந்துவரும் பொருட்செல்வ வேட்கை, மேலைநாடுகளின் மனப்போக்கில் மாற்றம், கலை இலக்கியத்தில் காணப்படும் ஒருமைப்பாடு, ஒரே வாழ்வியல் கொள்கைகள், எல்லாம் ஒருலகம் ஆகிய ஏழு விஷயத்

தலைப்புக்களைக் குறித்து ஏழு கவிஞர்கள் கவி பாடினார்கள். அப்போது மேலைநாடுகளின் மனப்போக்கில் மாற்றத்தை விஷயமாகக் கொண்டு பாடி அரங்கேற்றிய கவிதை இது.

## 4. பொங்கல் புதுநாள்: விருந்து

*14-1-1960* பொங்கல் தினத்தன்று திரு. சித்பவானந்த அடிகள் தலைமையில், திருச்சி வானொலி நிலையத்தார் 'பொங்கல் புதுநாள்' என்ற தலைப்பின்கீழ் ஒரு கவியரங்கை ஒலிபரப்பினார்கள். அந்தக் கவியரங்கில், வீடு, பண்ணை, விருந்து, நட்பும் சுற்றமும், கால்நடைச் செல்வம், நாடும் நகரமும், செழிப்பு முதலிய பல்வேறு தலைப்புக்களின் கீழ் ஏழு கவிஞர்கள் தமது கவிதைகளை அரங்கேற்றினார்கள். அப்போது 'விருந்து' என்ற தலைப்பின்கீழ் பாடி அரங்கேற்றிய கவிதை இது.

## 5. வீறு கொண்ட பாரதம்: வீரம்

இமயத்தின் எல்லையிலே சீனர்கள் ஆக்கிரமிப்புச் செய்ததைக் கண்டு வீறு கொண்டெழுந்த பாரதத்தைக் குறித்து *13-1-1963* பொங்கல் திருநாளையொட்டி திரு. திருக்குறள் முனுசாமி தலைமையில் திருச்சி வானொலி 'வீறு கொண்ட பாரதம்' என்ற பொதுத் தலைப்பின்கீழ் ஒரு கவியரங்கத்தை ஒலி பரப்பிற்று. அந்தக் கவியரங்கில் பாரதத்தின் வீரம், உழைப்பு, தியாகம், தன்மானம், ஈகை, உரிமை, அன்பு ஆகிய விஷயங்கள் குறித்து ஏழு கவிஞர்கள் தமது கவிதைகளை அரங்கேற்றினார்கள். அப்போது 'வீறு கொண்ட பாரதத்'தின் 'வீரம்' பற்றிப் பாடி அரங்கேற்றிய கவிதை இது.

# கம்பன் திருநாள்

## 6. எண் சுவைக் கம்பன்: வெகுளி

காரைக்குடி கம்பன் திருநாளின்போது *15-3-1957* அன்று பேராசிரியர் திரு. அ. ச. ஞானசம்பந்தம் தலைமையில் 'எண் சுவைக் கம்பன்' என்ற பொதுத் தலைப்பின்கீழ் ஒரு

கவியரங்கம் நடைபெற்றது. அந்தக் கவியரங்கில் நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை ஆகிய சுவைகளைக் குறித்து எட்டுக் கவிஞர்கள் தனித்தனியே கவிபாடி அரங்கேற்றினார்கள். அப்போது 'வெகுளி' என்ற பொருள்பற்றிப் பாடி அரங்கேற்றிய கவிதை இது.

## 7. கம்பன்: படை எழுச்சிப் பத்து

காரைக்குடி கம்பன் திருநாளின்போது 2-4-1958 அன்று பன்மொழிப் புலவர் திரு தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் தலைமையில் கம்பன்மீது வருகை, தாலம், ஊசல், மங்கலம், காட்சி, உறுப்பு, படை எழுச்சி, வாழ்த்து ஆகிய தலைப்புக்களில் எட்டுக் கவிஞர்கள் பத்துப் பத்துப் பாடல் களைக்கொண்ட பதிகங்களைப் பாடி அரங்கேற்றினார்கள். அப்போது 'படை எழுச்சிப் பத்து' என்ற தலைப்பில் கம்பன் மீது பாடி அரங்கேற்றிய பதிகமே இது. திருவாசகத்திலுள்ள திருப்படையெழுச்சியைப் போன்றது இது.

## 8. கம்பன் வடித்த பண்புகள்: கடமை

காரைக்குடி கம்பன் திருநாளின்போது 23-3-1959 அன்று, திரு நா. கனகராஜய்யர் தலைமையில் கம்பன் வடித்த பண்புகள் என்ற பொதுத்தலைப்பின்கீழ், பெண்மை, ஆண்மை, உரிமை, கேண்மை, பகைமை, சிறுமை, பெருமை, கடமை ஆகியவற்றைக் குறித்து, எட்டுக் கவிஞர்கள் கவிதை களை அரங்கேற்றினார்கள். அப்போது 'கடமை' என்ற தலைப் பில் பாடி அரங்கேற்றிய கவிதை இது.

## 9. கம்பன் கண்ட சமயக் கருத்து: வேதாந்தம்

காரைக்குடி கம்பன் திருநாளின்போது 9-4-1960 அன்று பேராசிரியர் திரு அ. சீனிவாச ராகவன் தலைமையில் 'கம்பன் கண்ட சமயக் கருத்து' என்ற பொதுத்தலைப்பின் கீழ் சைவம், வைணவம், சமணம், பௌத்தம், கிறிஸ்தவம்,

இஸ்லாமியம், வேதாந்தம், சமரசம் ஆகிய சமயக் கருத்துக்களுக்கும், கம்பன் காட்டும் கருத்துக்களுக்குமுள்ள ஒற்றுமை அம்சங்களைக் குறித்து எட்டுக் கவிஞர்கள் கவிதை பாடி அரங்கேற்றினார்கள். அப்போது கம்பன் கண்ட சமயக் கருத்து வேதாந்தமே என்று வலியுறுத்திப் பாடிய கவிதை இது. ராமகாவியத்தில் கதாநாயகனை ராமனது மானிட வடிவத்திலேயே கம்பன் வேத முடிவையும் கண்டான் என்று இந்தக் கவிதையில் வலியுறுத்தப் படுகிறது.

## 10. கம்பன்: அரசியல் அறிஞன்

காரைக்குடி கம்பன் திருநாளின்போது 30-3-1961 அன்று, தமிழ்க் கடல் திரு. ராய. சொக்கலிங்கம் தலைமையில் 'ஆறு துறை மேதை' என்ற பொதுத் தலைப்பின்கீழ் ஆறு கவிஞர்கள் கம்பனைப் பல்வேறு துறைகளில் சிறந்தவனாகக் கண்டு கவிதை பாடி அரங்கேற்றினார்கள். அப்போது கம்பனை அரசியல் அறிஞனாகக் கண்டு பாடி அரங்கேற்றிய கவிதை இது.

# பாரதி விழா

## 11. பாரதி: 'பிணி தீர்க்கும் மருத்துவன்'

கரூர் பாரதி கழகத்தாரின் ஆதரவில் 7-4-1957 அன்று தமிழ்க்கடல் திரு. ராய. சொக்கலிங்கத்தின் தலைமையின் கீழ் பாரதியை அருட்கவிஞர், ஆசான், எழுதுகோல், தெய்வம், சிற்பி, பிணிதீர்க்கும் மருத்துவன், சிவசக்தி ஆகிய ஆறு கோணங்களில் ஆறு கவிஞர்கள் கண்டு, கவிதை பாடி அரங்கேற்றினார்கள். அப்போது பாரதியைப் 'பிணி தீர்க்கும் மருத்துவ'னாகக் கண்டு பாடிய கவிதை இது.

## 12. பாரதி—யார்? : தோழன்!

பாரதி புகழ்ந்து பாடியுள்ள காரைக்குடி இந்து மதாபிமான சங்கத்தின் ஆதரவில், 1-11-1958 அன்று, தமிழ்க் கடல் திரு. ராய. சொக்கலிங்கம் தலைமையில், 'பாரதி—யார்?'

என்ற கேள்வியைப் பொதுத் தலைப்பாகக் கொண்டு ஒரு கவியரங்கம் நடைபெற்றது. அப்போது பாரதியை மனிதன், கவிஞன், புலவன், பழையன், புதியன், வீரன், காதலன், தோழன் ஆகிய வடிவங்களிலே எட்டுக் கவிஞர்கள் கண்டு, கவிதைகளைப் பாடி அரங்கேற்றினார்கள். அவ்வமயம், பாரதியைத் தோழனாகக் கண்டு பாடிய பாடல் இது.

## 13. பாரதி கண்ட தத்துவம்

புதுக்கோட்டை இலக்கிய மன்றத்தின் ஆதரவில் 25-9-1960 அன்று பாரதி விழாவையொட்டி, திரு. தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் தலைமையில் கூட்டிய கவியரங்கில், பாரதி கண்ட பெண்மை, அரசியல், சமுதாயம், தத்துவம் முதலிய விஷயங்களைக் குறித்து ஆறு கவிஞர்கள் தமது கவிதைகளை அரங்கேற்றினார்கள். அப்போது பாரதி கண்ட தத்துவத்தைச் சித்திரித்துப் பாடிய கவிதை இது.

## 14. 'மாநிலம் பயனுற வாழ்வதற்கே'

காரைக்குடி கலை இலக்கிய மன்றத்தின் ஆதரவில் 16-9-1962 அன்று பாரதியின் 'மாநிலம் பயனுற வாழ்வதற்கே' என்ற கவிதை வாசகத்தைப் பொதுத் தலைப்பாகக் கொண்டு, மொழி, கல்வி, இலக்கியம், சமுதாயம், தொழில், அரசியல், தத்துவம் ஆகிய துறைகளில் மாநிலம் பயன்பெறப் பாரதி கூறிய வழியிலே நின்று ஏழு கவிஞர்கள் தத்தம் கவிதைகளை அரங்கேற்றினார்கள். அந்தக் கவியரங்கத்துக்குத் தலைமை வகித்து அதனை நடத்தியபோது பாடிய பாடல்கள் இவை. அரங்கத் தொடக்கம், கவிஞர்களை அழைத்து அறிமுகம் செய்தல், அரங்கத்தை முடித்தல் ஆகிய எல்லாமே கவிதை வடிவத்திலே அமைக்கப்பட்டது. ஆரம்பம் முதல் இறுதி வரையிலும், வசனத்துக்கே இடமில்லாது நடைபெற்றது இந்தக் கவியரங்கத்தின் தனிச் சிறப்பாகும்.

# தாகூர் விழா

## 15. தாகூர் கண்ட மனிதன்

தாகூர் நூற்றுண்டு விழாவின்போது பல்வேறு ஸ்தாபனங்களைக் கொண்ட திருநெல்வேலி தாகூர் நூற்றுண்டு விழாக் குழு நடத்திய தாகூர் விழாவின்போது திரு. கா. மாயாண்டி பாரதி தலைமையில் 1961 மே மாதத்தில் கூட்டப்பெற்ற கவியரங்கில் தாகூர் கண்ட மனிதன், குழந்தை, தத்துவம், பெண்மை முதலிய விஷயங்களைக் குறித்துப் பல கவிஞர்கள் தமது கவிதைகளை அரங்கேற்றினர்கள். அப்போது தாகூர் கண்ட மனிதனை இனங்காட்டி, தாகூரின் கவிதை பலவற்றின் கருத்துக்களை உள்ளடக்கிப் பாடி அரங்கேற்றிய கவிதை இது.